

**ஸ்ரீமதி ஏ. சி. தேவகி.**

இப்பெண்மணியார் சென்னை மேரி கல்லூரியிற் பயின்று பி. ஏ. பரீக்ஷையில் இம்மாகாணத்தில் முதன்மைபெற்றிருக்கிறார்.



**ஸ்ரீமதி அமிர்தம்மாள்.**

ஆதி திராவிட வகுப்பைச் சேர்ந்த இவ்வம்மையார் சிதம்பரம் நகர பரிபாலன சபை அங்கத்தினராக நியமிக்கப்பெற்றுள்ளார்.



**ஸ்ரீமதி இ. ஜார்ஜி.**

இம்மாது சிரோமணி சென்னைக் கிறிஸ்தவ கல்லூரியிற் பயின்று சென்னை மாகாணத்தில் முதன் முதலாக எம். ஏ. தத்துவ பட்ட பரீக்ஷையில் தேறியிருக்கிறார்.

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி | விபவ௵ புரட்டாசி மீ ௧௨ | பகுதி |
|---|---|---|
| 14 | 1928௵ செப்டம்பர் மீ 16௳ | 3 |

## கடவுள் வணக்கம்.

காராரு மாணவக் காட்டைக் களைந்தறக்
கண்டகங் காரமென்னும்
கல்லைப் பிளந்துநெஞ் சகமான பூமிவெளி
காணத் திருத்திமேன்மேல்
பாராதி யறியாத மோனமாம் வித்தைப்
பதித்தன்பு நீராகவே
பாய்ச்சியது பயிராகு மட்டுமா மாயைவன்
பறவையணு காத வண்ணம்
நேராக நின்றுவிளை போகம் புசித்துய்ந்த
நின்னன்பர் கூட்டமெய்த
நினைவின் படிக்குநீ முன்னின்று காப்பதே
நின்னருட் பாரமென்றும்
ஆராரு மறியாத சூதான வெளியில்வெளி
யாகின்ற துரிய மயமே
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (1)

எனக்கோர் சுதந்தர மில்லையப் பாவெனக் கெய்ப்பில்வைப்பாய்
மனக்கோ தகற்றும் பரம்பொரு ளேயென்னை வாழ்வித்திடல்
நினக்கே பரநின்னை நீங்காத பூரண நின்கருணை
தனக்கே பரமினிச் சும்மா விருக்கத் தகுமென்றுமே. (2)

செய்யுஞ் செய்கையுஞ் சிந்திக்குஞ் சிந்தையும்
ஐய நின்னதென் றெண்ணு மறிவின்றி
வெய்ய காம வெகுளி மயக்கமாம்
பொய்யிலே சுழன்றே னென்ன புன்மையே. (3)

# அரும்பொருள் விளக்கம்.

1. இதனால் அடிகள் செந்நெறிச் செல்வராகிய மெய்யன்பர் திருக்கூட்டத்தில் தம்மையுஞ் சேர்த்துக் காக்குமாறு வேண்டுகிறார்.

(இ-ள்.) எத்தகைய நுண்ணறிவுடையாரும் காணாத அநிர்வசனீயமான ஞான ஆகாயத்தில் தோன்றுகின்ற துரிய வடிவே! எல்லா உலகங்களும் உனக்குள் அடங்கும்படி பரந்து நிறைந்து இன்பமயமான பரம் பொருளே! கரிய ஆணவம் ஆகிய காட்டைப்போக்கி இல்லாமற் செய்தும், அகங்காரம் ஆகிய கல்லைப் பிளந்தெறிந்தும், மனமாகிய பூமி வெளியாகும்படி மேலும் மேலும் பண்படுத்திருத்தி, அதில் யாரும் அறியாத மௌனம் என்னும் விதையை வித்தி அன்புநீர் பாய்ச்சி, அப்பயிர் நன்கு வளரும்வரை பெரிய மாயையாகிய வலிய பறவை வந்து அழிக்காமல் ஒழுங்காகக் காத்துப் பின்னர் விளையும் பேரின்பமாகிய போகத்தை அநுபவித்து உஜ்ஜீவன மடைந்த உன்னுடைய மெய்யன்பர் திருக்கூட்டத்தை நான் அடைய எனதெண்ணப்படி நீ காட்சியளித்துக் காத்தல் நினது திருவருட் கடமையாகும் என்பதாம்.

நல்விளைவு காணும் உழவர் மரம் செடி கொடிகளைப் போக்கிக் கற்களை நீக்கிப் பூமியை மேன்மேலும் உழுது பண்படுத்தி விதை விதைத்து நீரைப் பாய்ச்சி பறவை முதலியன நாசமாக்காவண்ணங் காப்பர்; அதுபோலப் பேரின்பம் விரும்பும் மக்களும் அவ்வின்பம் தோன்றற்கு நிலைக்களனாயுள்ள மனத்தின்கண் அதற்குப் பிரதிபந்தமாய் அடர்ந்திருக்கும் ஆணவ அகங்காரங்களை அறவே யொழித்து, அன்பு பெருக்கி, மாயா காரியங்களினின்றும் விடுபட்டு இருக்கவேண்டுமென்பார் இவ்வாறு உருவகப்படுத்திக் கூறினார்.

2. "எனக்கோர் சுதந்தரமில்லை" என்றதனால் பரமாத்மாவுக்கே சுதந்தரமுண்டு என்பது பெறப்பட்டது. இது "அவனன்றி யோரணுவு மசையாது" என்பதனானும் இனிது விளங்கும். வறுமையால் நெடுங்காலம் வருந்திய ஒருவன் நல்வினைப்பயனால் புதையல் கிடைக்கப்பெற்று வறுமை நோய் களைந்து இன்புறுமாறுபோல அகப்பற்றுப் புறப்பற்றுக்களால் உலகத்தில் வருந்தி நினைப்பார்க்குப் பரம்பொருள் தண்ணருள் சுரந்து இன்பம் அளிக்குமென்பார் "எய்ப்பில் வைப்பாய் மனக்கோ தகற்றும் பரம்பொருளே" என்றார். எய்ப்பில் வைப்பு — இளைத்தகாலத்தில் அதிர்ஷ்டவசமாய்க் கிடைக்கும் புதையல். மனக்கோது—இருவகைப் பற்றுக்களாலும் மனதில் தோன்றும் கிலேசம். பரம்—பாரம். ஈண்டு கடமையை உணர்த்திற்று. உடைமையைக் காத்தல் உடையான் கடன் என்பார் "சும்மா இருத்தல் தகும்" என்றார்.

3. உலகத்து உயிர்கட்கு உளதாகும் நன்மை தீமைகளெல்லாம் அவன் செயலால் நிகழும் என்பது கருத்து.

வெய்ய—கொடிய. காமம்—ஆசை. வெகுளி—கோபம். மயக்கம்—ஒன்றை ஒன்றாகக்கருதும் திரிபுணர்ச்சி. இவை முக்குற்றம் எனப்படும்.

---




## சமூக விடுதலை.

நமது பாரதநாட்டைப் புண்ணியபூமி, போகபூமி என்று நம்மனோர் வருணித்தல் வழக்கமாயிருந்து வருகிறது. ஆனால் மிஸ். மேயோ போன்ற அந்நியர் இந்தியாவைப்போல் கீழ்மையான விபரீததேசம் தற்கால உலகில் வேறொன்றில்லை என முடிவுகட்டி விட்டனர். போற்றுதல் தூற்றுதலான இவ்விரண்டு தன்மைகளுக்கும் காரணங்களில்லாமலில்லை. பல நூற்றாண்டுகட்கு முன்னர், இந்நாடு, நாகரிகத்திற் சிறந்து செழிப்புற்று விளங்கினமைக்குச் சரித்திர ஆதாரங்களும் சாஸ்திர ஆதாரங்களும் சான்று கூறுகின்றன. தத்துவங்கட்குத் தாயகம் என்று உலகம் புகழ்கின்றது. போக்குவரவு சாதனங்கள் மோசமாயிருந்த நெடுநாட்களுக்கு முன்னரே ஆயிரக்கணக்கான மைல்களுக் கப்பாலிருந்த ஐரோப்பியர் மனங்களையும் நமது நாட்டுச் செழுமை கவர்ந்து நின்றதென்றால் பழம் பெருமையைப்பற்றி நாம் விரித்துரைக்க வேண்டுவது மிகையாகும். தற்கால இந்தியா உண்டிக்கும் உடைக்கும் பிறர் உதவியை நாடி நிற்கின்றது. ஒருகாலத்தில் உலகத்துக்கே உண்டியும் உடையும் அறிவும் அளித்த நம் நாட்டு மக்கள் இக்காலத்தில் ஆண்டுதோறும் பல்லாயிரக்கணக்கானவர் அந்நிய நாடுகளுக்குச் சென்று அடிமைகளாகி அல்லற்படுகின்றனர். காரணம் அந்நியர் ஆதிக்கமும் மூடப்பழக்க வழக்கங்களுமே என்பது வெளிப்படையானதாகும். பொதுநல நோக்கங்கொண்ட அறிஞர் பலர் அரசியல் முன்னேற்றம் சமூக முன்னேற்றங் கருதி உழைத்து வருகின்றனர். பெரும்பாலும் இவர்களுடைய முயற்சிகள் நகரங்களோடு நிற்பனவே யொழிய கிராமாந்தரங்கட்கு எட்டுவதில்லை. அநேகமாய்ச் சில தலைவர்களைப் போட்டா போட்டியும், அபிப்பிராய பேதமும்,

சுயநலமுங் குறுக்கிட்டுக் கெடுத்துவிடுகின்றன. அரசியல் பிரசாரம் வீறுகொண்டு நிற்பதுபோல் நமது நாட்டில் சமூக சீர்திருத்தப்பிர சாரம் இல்லை என்றே சொல்லலாம். பெரும்பான்மையான மக்கள் கல்வியறிவின்றி விலங்குகட்கு நிகராக வாழ்ந்து வருகின்றனர். இவர்களைச் சம்பிரதாய மாத்திரமாயுள்ள பொருளற்ற ஒழுக்க வழக்கங்கள் இறுகப் பிணித்து நிற்கின்றன. அரசியல்வாதிகள், எல்லாம் சுயராஜ்யம் வந்தால் சரியாய்ப் போய்விடுமென்கிறார்கள். முன்னர் வேண்டுவது சுயராஜ்யமா? சமூக சீர்த்திருத்தமா? என்பது வியவகாரத்துக்குரிய விஷயம். இதுபற்றி ஈண்டுவாதித்தல் மற்றொன்று விரித்தலாகும். அரசியல் நிலைமை சமூகநிலைமையின் பிரதிபிம்பம் என்பது ஒரு பேரறிஞரின் துணிபு.

தக்க கல்வியறிவின்றி எந்நாடும் முன்னேற முடியாது. மேனாடுகளும், கீழ்த்திசை ஜப்பானும் பல திறக் கலைப்பெருக்கம் ஓங்கி நிற்றலினாலேயே தலைசிறந்து விளங்குகின்றன. பழைய நமது நாட்டுக் கலைகள் இருந்தவிடம் தெரியாமல் மறைந்தன. ஆங்கிலக் கல்வி நாட்டில் ஒருவித விழிப்பை உண்டாக்கிற்றென்றாலும் அடிமை வாழ்வாகிய உத்தியோகங்களுக்கே உரியதாகி வேலையில்லாத் திண்டாட்டத்தை உண்டுபண்ணும் தோரணையி லமைந்திருக்கிறது. விவசாயம், தொழில், வியாபாரம் முதலிய துறைகளுக்குரிய கல்வி எளிதில் சித்திக்கும்படி செய்யத் தலைவர்கள் விசேஷ சிரத்தை காட்டவேண்டும்.

வடநாட்டில் ஹிந்து—முஸ்லிம் போராட்டம் இருப்பது போல் தென்னாட்டில் பார்ப்பனர்—பார்ப்பனரல்லாதார் சண்டை வலுத்து நிற்கிறது. தாழ்த்தப் பட்டோர் நிலைமையும் பெண்கள் நிலைமையும் நாட்டின் ஈனத்தன்மையை வெளிப்படுத்தி நிற்கின்றன. இவற்றிற்கெல்லாம் ஒரு சிலர் சாஸ்திர சம்மதங்களிருப்பதாகக் காட்டி ஊறு செய்து வருகின்றனர். சாதி சமயப் பேரால் இந்நாட்டில் உயர்வு தாழ்வு உணர்ச்சி தடிப்பேறி நிற்கிறது. பண்டைய உண்மை நூல்களை ஊன்றி நோக்குவார் இத்தகைய மனப்பான்மைக்குச் சிறிதும் ஆதாரமில்லை என்பதை நன்கு தெரிந்து கொள்ளுவர். இதைப் பல அறிஞர் ஆராய்ந்து விளக்கியிருக்கின்றனர். சமயப் பிறப்பிடம் நமது நாடு. எல்லா மதமும் மன்னுயிரைத் தன்னுயிராகப் போற்றவேண்டு மென்றே போதிக்கின்றன. அஹிம்சைதான் நமது நாட்டுத் தருமத்தில் முக்கியாம்சம் பெற்றிருக்கிறது. தற்காலம் மதத்தின் பேராலும் சாதியின் பேராலும் நிருமாணிக்கப் பெற்றிருக்கும் ஒழுக்கவழக்க ஐதிகங்கள், மதங்களின் உண்மை நோக்கமாகிய அஹிம்சா தருமத்தையே அலட்சியம் செய்வனவாயிருக்கின்றன. இக்காலத்தில் இவ்வொழுக்க வழக்கங்கள் மக்களிடை பரஸ்பரம் பகைமை கொள்ளும்படியாகச் செய்துவிட்டமையால் நாடு சிதறுண்டு நிற்கிறது. இந்தியர் கட்டுப்

பாடுடைய ஒரு சாதியார் என்னும் காலம் எப்போது வருமோ தெரியவில்லை.

சகோதரத்துவம், சமத்துவம், சுதந்தரம் ஆகிய இம்மூன்றும் தற்கால பிரபஞ்ச பொதுத் தருமமாக மதிக்கப்படுகின்றன. இவையில்லாத நாடு நாடாகவே மதிக்கப்படாது. இந்த மூன்று தருமங்களையும் பூரணமாகப் பெற்றிருக்கின்றமையால்தான் ஒரு சிறு தொகைகொண்ட ஆங்கிலேயர் ஒற்றுமையிற் சிறந்து ஆயிரக் கணக்கான மைல்களுக் கிப்பாலுள்ள முப்பத்து முக்கோடி மக்கள் நிரம்பிய இந்தியா மாத்திரமல்லாமல் உலகத்தில் பிற சில நாடுகளை யும் கட்டி ஆளுகின்றனர். நேயர்களே! நம் மக்கள் எந்நிலையில் இருக்கின்றனர் என்று சற்றே நோக்குமின்! சமூக விஷயத்திலும் ராஜீய விஷயத்திலும் பூரண அடிமைகளாகிப் புழுங்குகின்றனர் அன்றோ? ஆதலால் பயனற்ற பந்தங்களை யொழிக்கத் தீவிர முயற்சி யெடுக்கவேண்டும். ஒருவரை யொருவர் ஒரு சமூகத்தை மற்றொரு சமூகம் அடக்கியாளும் மனப்பான்மையை அறுத் தெறியவேண்டும். உலகம் பொதுவானது. இதில் தனி மனிதனோ தனிச்சமூகமோ சிறப்புரிமை பாராட்ட நியாயமில்லை. ஒருநாடு இன்புற்று வாழவேண்டுமென்றால் அந்நாட்டு மக்களுக்குள் பரஸ்பர ஒத்துழைப்பு இருக்கவேண்டும். ஒரு தாய் வயிற்றிற் பிறந்த உடன்பிறப்பாளர்போல் ஒருவரை யொருவர் நேசிக்க வேண்டும். சகோதரர்களுக்குள் ஒற்றுமையின்றேல் குடும்பம் கெடும். அஃதேபோல் நாட்டுமக்களுக்குள் ஐக்கியம் இல்லாவிட் டால் நாடு கெடும். சுயநலம் மிகுந்தால் குழப்பமும் கிளர்ச்சியும் வளர்ந்தே தீரும். வல்லமையினாலோ சூழ்ச்சியினாலோ அறிவு விளக்கமுறாத மக்களைக் கொஞ்சக்காலம் அடக்கி வைக்கலாம். எப்போதாவது உண்மை வெளிப்படுதல் இயற்கையே யாகும்.

பிறப்பினால் உயர்வு தாழ்வு கற்பித்தல் அடாது. தமிழகத்தில் முற்காலத்தில் இக்கொள்கை இருந்ததில்லை என்பது "பிறப்பொக் கும் எல்லாவுயிர்க்கும்..." என்னும் பொய்யாமொழியால் நன்கு துணியப்படும். குணத்தாலும் தொழிலாலும் உயர்வு தாழ்வு ஏற் படல் சகஜம். நமது தேயத்தில் பிறப்பினால் எல்லாரும் ஒரு தன்மையர் என்னும் சமத்துவ உணர்வு கிளர்ந்து விளங்கவேண்டும். சகோதரத்துவ உணர்ச்சி சமத்துவத்தை நிலவச்செய்யும். நல்வாழ் வுக் காதாரமான இவ்விரு குணங்களும் மக்களிடம் வளர்ந்தால் ஐக்கியமும் ஆற்றலும் வருதல் உறுதியாகும். ஒன்றுபட்ட வாழ்க் கையால் சமூகம் விடுதலைபெற்றுச் சுதந்தர வின்பம் திளைக்கும் என்பதிற் சந்தேகமில்லை. சுதந்தரமில்லாத வாழ்வு நரகத்தோ டொக்கும்.

பிறருக்கு ஊறு நிகழாவண்ணம் அவரவரிஷ்டப்படி நடக்க யாருக்கும் உரிமை உண்டு. ஆனால் சகோதரத்துவம் சமத்

துவமாகிய குணங்கட்கு எவ்விதத்திலும் கேடு நிகழாமற் காக்க வேண்டும். சுயநலம் தான் எல்லாக் கேடுகட்கும் மூலகாரணம். இம்மை மறுமை இன்பங்கட்கு மதம் வழிகாட்டவேண்டும். தத்துவங்களால் பிரசித்திபெற்ற நமது நாடு மதங்களின் பேரால் கீழ்மை யடைந்து வருகிறது. ஒரேநாட்டில் பிறந்த மதங்களே முரண்பட்டுப் போர் நிகழ்த்துவதால் இந்தியர்கட்குப் பொது வான மதம் இல்லை என வாதிக்கப்படுகிறது. சில மூட வழக்கங் களே மதம் எனப் பாமரமக்கள் நினைப்பதனால் மதத்தை ஒழிக்க வேண்டும் என்ற கிளர்ச்சி தமிழ்நாட்டில் வலுத்து வருகிறது. அறியாமையால் குறுகிய திருஷ்டியுள்ள மதவாதிகள் போராடி னாலும் எல்லா மதங்களும் ஒப்பத்தக்க பொதுவான உண்மைத் தத்துவங்கள் பழைய அரிய நூல்களில் செறிந்திருக்கின்றன. இவை இந்துதருமம் என்ற புதுப்பெயரால் அழைக்கப்படுகின்றன. எல்லாமத தத்துவங்களையும் உள்ளடக்கி ஸ்ரீ விவேகாநந்தர் முத லிய பெரியார் இப்பெயராலேயே பாராட்டி யிருக்கின்றனர். ஆகையால் நமதுநாட்டு உலகம் போற்றும் உயரிய சமதரும தத்துவங்களைவிட்டு விடமுடியாது. போலித்தன்மைகளை ஒழித்து உண்மைத் தருமத்தை ஒழுங்குபடுத்திப் பிரசாரம் செய்தலே முறை யும் நலனும் ஆகும்.

சீர்திருத்த விஷயத்தில் அமிதவாதிகளாக உள்ளவர்கள் சில முறைகளைக் கவனிக்க வேண்டும். சமூக முன்னேற்றத்திற்குத் தடைகளாக உள்ளவற்றை யெல்லாம் ஒழித்தேயாக வேண்டும் என்பது எமது உண்மை நோக்கமாகும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக ஏறி ஊறிப்போன முரண்பட்ட ஒழுக்க வழக்கங் களைத் திடும்பிரவேசமாக ஒழிக்கப் புகுவதில் சில விபரீதங்கள் விளையலாம். பொடிப்போடுதல், சுருட்டுப் பிடித்தல் முதலியன தீமை பயக்கும் என உணர்ந்தும் சிலர்க்கு எளிதில் விட முடிவ தில்லை என்றால் இம்மைக்கும் மறுமைக்கும் உறுதிபயப்பன எனக் கருதும் ஒழுக்கங்களை சாதாரண மக்கள் எப்படி அதிவிரைவில் விடக்கூடும்? உணர்ச்சியில் மாறுதலேற்படவேண்டும். அதற்குத் தக்க கல்வியும் போதனையும் உரமாகத் தரவேண்டும். பலதிறப் பட்ட அறிஞர்கள் முதலில் ஒன்றுகூடி மக்கள் கைக்கொள்ளத் தக்க நல்லொழுக்கங்களை நிருமாணித்து உறுதிசெய்யவேண்டும். பின்னர் சரியான திட்டத்தையும் பிரசார முறையையும் அமைக்க வேண்டும். சாந்த முறையைப் பேச்சிலும் எழுத்திலும் கையாள வேண்டும். எல்லாமவல்ல பரம்பொருளின் திருவருளை வழுத்திச் செவ்விய நோக்கத்தோடு முயன்றால் ஆகாத காரியம் அவனியில் என்ன உளது?

**ஓம் தத் ஸத்.**

---

## ஆரம்ப பாடசாலை ஆசிரியரும் மானேஜரும்.

நமது நாட்டின் திரவிய சகாய ஆரம்ப பாடசாலைகள் பெரும்பாலும் ஆசிரியர், மானேஜர் ஆகியவர்களால் நடைபெறுகின்றன. இவற்றில் பல ஆசிரியரும் மானேஜரும் ஒருவராகவே யிருப்பனவாகவும், சில ஆசிரியர் வேறு மானேஜர் வேறுயிருப்பனவாகவும் இருக்கின்றன. இப்பாடசாலைகளின் நிலைமையைப்பற்றி எனது அனுபோகத்திற் கெட்டியவரையில் சிறிது "ஆனந்தபோதினி" வாயிலாய் வெளியிடில் ஆன்றோ ருணர்ந்து, குறை நீங்க முயற்சிப்பரென்னும் அவாக்கொண்டு வரையலானேன்.

ஆசிரியராகவும், மானேஜராகவும் பாடசாலைகளில் அமர்ந்துள்ளவர்களில் பெரும்பான்மையோர் யாதொரு கல்விப் பயிற்சியிலும் சர்ட்டிபிகேட் பெறாதவரா யிருக்கின்றனர். ஒன்றைச் சரியாக எழுதப் படிக்கக்கூடத் தெரியாதவர்கள். இவர்களுள் தம்முடைய பெயரை எழுதும்போதுகூட சந்தேகப்படுகிறவர்களும் உளர். இத்தகையோர் எவ்வாறு ஆசிரியராதல் கூடும்? இதற்கு ஓர் உதாரணம் மட்டும் கூறுகின்றேன்.

மனப்பாடமாக நாடகப் பயிற்சியுள்ள ஒருவர், ஒரு கிராமத்தில் நாடக உபாத்தியாயராக அமர்ந்து, 4, 5 மாதங்கள் தங்கி அங்குள்ளவர்க்கு ஒரு நாடகம் கற்பித்துப் பூர்த்தி செய்கிறார். இதற்குள் கிராமத்தில் பலவித பழக்கங்கள் ஏற்பட்டுவிடுகின்றன. இவருக்கு அவ்வூரை விட்டகல மனம் வருவதில்லை. அவ்வூர் வாசிகளும், "நீங்கள் இங்கேயே இருங்கள்; ஏதோ பத்துப் பிள்ளைகள் சேர்த்து ஒரு பள்ளிக்கூடம் வையுங்கள்; உங்களுக்குத் தெரிந்த வரையில் அவர்களுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுத்தால் போதும்; எங்கள் பிள்ளைகள் என்ன தாசில் பண்ணப் போகிறார்களா?" என்கின்றனர். அதன்மேல் அந்த வாத்தியார் பாடசாலை ஏற்படுத்தி அதன்மூலமாயும் முன் உள்ளவர்களின் ஆதரவினாலும் அங்கே சில நாட்களைக் கழிக்கின்றனர். பின்பு அவர் பக்கத்திலுள்ள ஒரு தெரிந்த உபாத்தியாயரைக் கொண்டு பாடசாலைக்கு வேண்டிய ரிஜிஸ்தர் முதலானவைகளைத் தயார்செய்து, திரவிய சகாயத்திற்கு அதிகாரிகளுக்கு மனுச்செய்துகொள்ளுகிறார். அக்கிராமத்தில் முன் பாடசாலை இல்லாமலிருந்து இது புதிதாக வைக்கப்பட்டிருப்பதால் அம்மனு அங்கீகரிக்கப்படுகிறது. வருஷாந்தரப் பரீக்ஷைவரையில் பள்ளிக்கூடம் செவ்வனே நடைபெறும். வருஷப்பரீக்ஷையும் முடியும். உபாத்தியாயருக்குத் திரவிய சகாயமும் கிடைக்கும். இத்துடன் அக்கிராமவாசிகள் தாங்கள் ஒரு மனிதனை உபாத்தியாயராக்கி சர்க்கார் பணமும் கிடைக்கும்படியான பெரிய ஏற்பாட்டைச் செய்துவிட்டதாகவும், இனி உபாத்தியாயரின் ஜீவனத்திற்குக் குறைவில்லையென்றும் எண்ணி வாளா இருக்கின்றனர். உபாத்தியாயரும் தாம் நல்ல பெயர் எடுக்க எண்ணித் தம்மிடமுள்ளதை வஞ்சகமின்றிக் கற்பித்துவிடுகின்றார். இனி இவரிடமிருந்தால் பிள்ளைகள் தெரிந்துகொள்வது பழையபாடம்; அல்லது நாடகம். ஆனதால் நாளுக்கு நாள் மாணவர்களின் எண்ணிக்கை குறைவுபடுகிறது. வருமானத்தைக் குறித்தோ சொல்லவேண்டியதில்லை. என்செய்வது? அவர், திரவிய சகாயத்தை எதிர்நோக்கிக் கடன்வாங்கிக் காலங்கழிக்க ஏதுவுண்டாகிறது. பின் அவர் எதிர்நோக்கிய மார்ச்சு மாதத்திற்கு நாள் எண்ணிக்கொண்டேயிருந்து ஷை மாதம் பிறந்தவுடன் தபால் ஆபீஸுக்குப் பிரதி வாரத்திலும்

பல தடவைகள் சென்று, செக்கு கிடைத்தவுடன் ஒருவரிடமும் காட்டாதோடி, கஜானாவில் கொடுத்துப் பணம்பெற்றுத் தாம் பாடசாலை நடத்திய கிராமம் வராது போகின்றனர்.

இப்படி விருத்திக்குறைவு ஏற்பட்ட கிராமத்தில் வேறு உபாத்தியாயர் பாடசாலை ஏற்படுத்தி நடத்தினால், அதுதெரிந்த பழைய மானேஜர் புதியவரிடம் வந்து, "ஐயா! என்ன இந்த ஊர் நான் இருந்து பார்த்ததுதானே. இங்குள்ளவர்கள் 6-மாதம் சம்பளம் கொடுப்பார்கள்; அப்புறம் ஒன்றும் நடக்காது. நீர் புதிதாகக் கணக்குக் கொடுத்தால் இன்னும் 2-வருஷம் செல்லும் கிராண்டு வாங்க; அதற்கும் நான் என்னுடைய பள்ளிக்கூடத்தை மூடிவிட்டதாக ரிபோர்ட்டுப் பண்ணினால்தான் உமது பள்ளிக்கூடம் அங்கீகாரம் ஆகும். நான் அப்படி மூடப்போகிறதில்லை. பரீக்ஷை நோட்டீஸ் வந்தவுடன் ஏதோ என்னிடம் படித்த பழைய பையன்கள் 4-பேரைக் கொண்டுவந்து நிறுத்திக் காட்டிவிடுகிறேன்: எனக்குக் கிராண்டு வந்துவிடுகிறது" என்று மேலுங்கீழுமாகப் பேசி, "போகிறது. நீர் வேண்டுமானால் என்னுடைய ரிஜிஸ்தரில் பதிவுசெய்து வாரும். கிராண்டில் தலைக்குப் பாதி யெடுத்துக்கொள்வோம்" என்று உபசாரவார்த்தை சொல்லிச் சரிப்படுத்த அவ்வாறே பதிவுசெய்து வருகின்றனர். புதிய உபாத்தியாயரும் ஏதோ சீக்கிரத்தில் கொஞ்சம் பணம் கிடைக்கும்போலிருக்கிறதே என ஒப்புக்கொண்டு அதற்கிசைந்து நடந்து வருகின்றார். கிராண்டு வந்தவுடன் மூன் வாத்தியார் செக்கு வாங்குவதும், மாற்றுவதும் காண்பது அரிது; பின் இருக்குமிடமும் காண்பது அரிது. புதியவர் நாம் தனியாக கணக்குக் கொடுத்திருந்தால் அடுத்த வருஷத்திலாவது பணம் கிடைக்குமே, இப்போது பாதிக்கு ஆசைப்பட்டு மோசம்போனோமே என்று ஏங்கியிருக்கின்றார்.

பின் சிலமாதங்கழித்து அவர், மூர்த்தின ஆசாமியை எங்கேயாவது தற்செயலாகக் கண்டு, "ஏனையா! கிராண்டு பேசியபடி கொடாமல் போய்விட்டீரே" என்றால், அவர், "என்னபோங்க வீட்டிலே எங்க பொம்பளைக்கு ரொம்ப ஆபத்து; புழைச்சதே மறுபிறப்பு போங்க; உங்கபணம் எங்கேபோகுது" என்று சிறு சிரிப்பும், முகவாட்டமும், பெரிய சத்தியவான் போன்ற பாவனையுங்காட்டி, "அதுபோகிறது; உங்களுக்கு மானேஜ்மெண்டையே எழுதிக்கொடுத்து விடுகிறேன்; வருகிற கிராண்டில் எனக்கு என்ன தருகிறீர்கள்? அதை இப்போதே கொடுத்துவிடும்; அதை நான் மாற்றிவைத்து விடுகிறேன்" என்கின்றார். புதிய பேர்வழி யோசிக்கிறார்: "என்ன தொலைகிறது. போன வருஷம்போல் இருந்தால் இந்த கிராண்டும் அந்தப்பழம் புலி கொண்டுபோய் விடும்; நாம் புதிதாய் கணக்குக் கொடுத்தாலும் இன்னும் இரண்டு வருஷம் செல்லும்; சரி இப்போது ஏதாவது தொலைத்து மாற்றிக்கொள்வதுதான் நல்லது" என்று எண்ணி அதற்குச் சம்மதிக்கிறார். அப்படிச் சம்மதிக்காமல் "வந்த கிராண்டில் என்பாகத்தைக் கொடு. அடுத்த வருஷத்திய சங்கதியைப்பற்றிப் பேசிக்கொள்ளலாம்" என்றாலோ, அவர் "வந்தது நான் இருந்தபோது நடந்த பரீக்ஷைக்கு வந்த கிராண்டு; நீர் இருந்த காலத்தில் நடந்த பரீக்ஷைக்கு இன்னும் கிராண்டு வரவில்லை. வந்தால் பேசிக்கொள்ளலாம்; என்னுடைய ரிக்கார்டுகளைக் கொடும்; நான் வேறே ஒரு உபாத்தியாயரை அமர்த்தியிருக்கிறேன். 2. பங்கு எனக்கும் ஒரு பங்கு அந்த உபாத்தியாயருக்கும் கொடுப்பதாகப் பேசி யிருக்கிறேன்" என்று இப்படிப் பெரிய வாதுகள் பேசி ஏதோ கிடைத்த வரையில் பற்றிக்கொண்டு மானேஜ்மெண்டை விற்பனை செய்கின்றனர். இம்மாதிரி பலவிதமாக மானேஜ்மெண்டானது கிரயசாசனமாக இருந்து வருவது பெரிதும் பரிதாபகரமானது,

இன்னும் இப்பாடசாலை உபாத்தியாயர்களும், மானேஜர்களும் செய்து கொள்ளும் குறைகள் பல உள. அவற்றை விரிக்கிற் பெருகும் எனவும் எல்லா உபாத்தியாயர்களுக்கும் குறைவைத்தரும் எனவும் அஞ்சிவிடுத்தனன்.

இவ்வித குறைகள் ஏற்படுவதின் காரணம் என்னை எனில்,

"தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு"

என்பதை யனுசரித்து ஆரம்பப்படிப்பு 5-வது வகுப்பு வரையிலாவது படித்து சர்ட்டிபிகேட் பெறுதவர்கள் உபாத்திமார்களாய் வருதலும்,

"வனப்பழிக்கும் வாய்மை நலனழிக்கும் மான
நிலைப்பழிக்கும் நெஞ்சம் சிதைக்கும்—வினைப்புகுத்தும்
காதலிகாந் தர்க்குள் கலாம்விளைக்கும் காசினியில்
வேதனைகள் செய்யும் மிடி"

என்றபடி வேதனைசெய்யும் தாரித்திரியத்தை யடைதலுமே யாகும். ஆதலின் கீழ்க்கண்ட முறைகளை அனுசரித்தால் இக்குறைகள் நீங்கு மென்பது எனது துணிபு. அவையாவன:—

1. குறைந்தது ஆரம்பக் கல்விக்கு ஐந்து வகுப்பு முடியவாவது பயின்றவர்கள் ஆசிரியராய் இருத்தல்.

2. அவரது காலக்ஷேபத்திற்குப் போதுமான அளவு திரவிய சகாயம் அளித்தல்.

3. பாடசாலைகளின் விடுமுறைகளை அந்தந்த ஜில்லா கல்விச் சங்கத்தார் அல்லது ரேஞ்சு டிப்டி இன்ஸ்பெக்டர் ஆகியவர்கள் நிச்சயித்து ஒவ்வொரு பாடசாலைக்கும் ஒரு லிஸ்டு பிரதிவருஷத்திலும் கொடுப்பது அல்லது மானேஜர்களே தயார் செய்து அனுப்பி அங்கீகாரம் பெற்றுக் கொள்வது.

4. எல்லா ஆசிரிய மானேஜர்களுக்கும் சர்வீஸ் புஸ்தகம் வைத்துக் கட்டாயமாக பிராவிடெண்டு பண்டு பிடித்தம் செய்வது.

5. சென்ட்ரல் சங்கங்களுக்கு பிரதிமாதமும் தவறாமல் ஆஜராகவேண்டு மென்று கட்டாயப் படுத்துவது.

6. பாடசாலைகளை அடிக்கடி பரிசோதனை செய்வது.

7. கிராம வாசிகளுக்குப் பயன்தரத்தக்க கல்வி முறைகளை ஏற்படுத்துவது.

8. சர்டிபிகேட் பெற்றவர்களால் நடத்தப்படும் புதிய பள்ளிக்கூடங்களை சப்ளிமெண்டில் திரவிய சகாயத்திற்கு அங்கீகரிப்பது.

9. இறந்துபோதல் போன்ற அவசியமான காரணமின்றி மானேஜ்மெண்ட் மாற்றப்படுவதை அங்கீகரிக்காமை.

10. ஒரு கிராமத்திலிருந்து மற்றொரு கிராமத்திற்குப் பாடசாலை அடிக்கடி மாற்றப்படாமை.

ஆகிய முறைகளை மேற்கொண்டால் பாடசாலைகள் ஒழுங்காக நடைபெற்று கவர்ண்மெண்டாருடைய காருண்ய திரவிய சகாயத்தினால் தேச முன்னேற்றம் ஏற்படும். இது ஆன்றோர் உளம்புக்குச் சீர் திருத்தமுற ஈசன் கருணைபுரிவாராக.

M. P. சந்திரப்பிரகாசம்,

---




## ஸ்ரீ ராமேச சந்திர தத்தர்.

### 1. பூர்வாங்கம்.

பாரதமாதேவிக்குப் பலாபேக்ஷையின்றிப் பாங்குறத் திருத்தொண்டாற்றத் தோன்றிய பாக்கியவான்களான வீரசிம்மங்களுள் பெரும்பான்மையோரின் ஜென்மபூமி வங்காளமேயாகும். அவ்வங்கமாதேவியின் வரபுத்திரரான ஸ்ரீமத் விவேகானந்த மூர்த்திகள் 'ஹிந்துமத' உத்தாரணராய் உலகோருள்ளத்தில் அருள்வெள்ளத்தைப் பாய்ச்சினர். சுரேந்திரநாத் பனர்ஜி, சித்தரஞ்ஜனதாஸர் முதலான சிம்மங்களை ஈன்ற சீருடைப் பூமியும் வங்காளமேயாகும். வங்காளமே கலைமகளின் இருப்பிடம்; அஷ்ட லக்ஷ்மிகளும் அற்புதவாஸஞ்செய்யு மரங்கம்; தேசாபிமானமுள்ள தியாகமூர்த்திகளின் திவ்ய அவதாரஸ்தலம். இத்தகைய சிறப்புவாய்ந்த வங்கமாநாட்டிற்குத் தலைநகரான கல்கத்தா வென்னுங் காளிகட்டத்தில் 'ரம்பாகான்' என்னும் பேட்டை யொன்றுண்டு. பெரும்பான்மையும் 'காயஸ்தர்' என்னும் கணக்காயச்சாதியார்களே அப்பாகத்தின் வாசிகளாவார். அவர்களுள், தத்தர் குல உத்தம மரபினர் மிகவும் படித்தவர்களா யிருந்தனர். பதினெட்டாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் நீலமணிதத்தர் என்பார் அக்காயஸ்த குலதிலகமா யிலங்கினர். அவருடைய இளைய சகோதரரான ரஸமய தத்தர் வடமொழியில் பாணினிக்கு நிகரானவராய் கல்கத்தா 'சமஸ்கிருத காலேஜி'ன் தலைமையாசிரியர் (பிரின்ஸிபல்) பதவியை வகித்திருந்தார். இவருக்கு முன் எந்த இந்தியரும் இத்தகைய மேலான பதவியை வகித்ததில்லை. இங்ஙனம் சிறிதுகாலம் வடமொழித்தொண்டாற்றியபின்னர் அவர் கல்கத்தா நீதிபதியாக ஆக்கப்பெற்றார். அதற்குப்பின் லார்ட் வில்யம் பெண்டிங் துரைமகனர் இந்திய அரசப் பிரதிநிதியா யிருந்தகாலத்தில், அவருடைய பெருங்கருணையால் இந்தியர்கட்கு உயர்ந்த உத்யோகங்கள் அளிக்கப்பெற வேண்டுமென்ற திட்டமேற்பட்டது. அது அனுஷ்டானத்திற்கு வந்ததன் பலனாய் நீலமணிதத்தரின் புதல்வரான ஈசான சந்திர தத்தர் முதல் முதலாக 'டெப்யூடி கலெக்டர்'' ராக நியமிக்கப் பெற்றார். இவ்வீசான சந்திரருக்கு கி. பி. 1848-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 13-ம் தேதி ஸ்ரீராமேச சந்திர தத்தர் திருவவதரித்தார்.

### 2. இளமைப் பருவம்.

ஈசான சந்திர தத்தர் அடிக்கடி தம் உத்தியோக நிமித்தம் வங்காளத்தின் உள்நாட்டுப்பாகங்களில் வசிக்க நேர்ந்தமையால், ராமேச சந்திரரின் இளமைப் பருவமும் வங்காள நாட்டின் வர்ணனைக் கேற்ற பாகங்களிற்

கழிந்தது. பிறகு, ராமேச சந்திரதத்தர் தமது பெற்றோர்கள் தேக வியோக மாக, தமது சிறிய தந்தையாகிய சசி சந்திர தத்தரின் ஆதரவிலிருந்து கல்வி பயின்று வந்தார். சசி சந்திரர் வடமொழியில் வல்லுநராயிருந்ததோடு ஆங்கில இலக்கியத்தில் ஈடற்ற ஆர்வமுடையாராதலின் அவருடைய ஆதரணையி லிருந்த ராமேசருக்கும் வாலிபமுதல் அம்மொழியிடம் அளவற்ற பிரியம் ஏற் பட்டிருந்தது. ராமேசர் 1864-ல் பிரவேச பரீக்ஷையில் அவர் படித்துவந்த வித்யாசாலைக்கே முதல்தர மாணவராய்த் தேறினர். பிறகு 1866-ல் அப் பரீக்ஷையில் அச்சர்வகலாசாலைக்கே இரண்டாவது மாணவராய்த் தேறினர். தேறவே, எல்லோரும் செய்வதுபோலத் தாமும் சீமைக்குச் சென்று ஐ. ஸி. எஸ். பரீக்ஷை கொடுக்கவேண்டுமென்ற எண்ணம் அவருக் கெழுந் தது. இவ்விஷயம் அவருடைய போஷகர் செவிப்பட்டதும், அவர் சீற்றங் கொண்டு கப்பலேறிச் செல்வதுகூடாதென்று ராமேசரைத் தடுத்துவிட் டார். ராமேசரின் ஸ்தூல சரீரம் தடுக்கப்பட்டபோதிலும், சூக்கும சரீ ரத்தின் அவா அடங்கிற்றில்லை. பெரியோரை எடுத்தெறிந்து பேசி தாயை யடக்கி மகள் விபசாரஞ் செய்வதுபோல், நடந்துகொள்ளவும் அக்குணசாலி யின் மனம் இடந்தரவில்லை. அங்கும் அவா! இங்கும் பெரியார் மொழி களைத் தட்ட மனமின்மை!—இப்படி அவர் தயங்கிக்கொண்டிருக்கும் சம யத்தில், தமது நண்பர்களான ஸ்ரீயுத விகாரிலால் குப்தா அவர்களும், ஸ்ரீயுத சுரேந்திரநாத் பனர்ஜி யவர்களும் இங்கிலாந்துக்கு மேற்படி பரீ க்ஷையின் நிமித்தம் புறப்பட நிச்சயித்திருந்தமை கண்டு, தாமுஞ் செல்வ தென்றே உறுதி பூண்டார். ஸ்ரீ விகாரிலாலரும் ராமேசரும் தமது போஷ கர்களின் அனுமதி பெறாமல், அவர்களறியாவண்ணம் இரவோடிரவாகப் புறப்பட்டுவிட்டார்கள். ஸ்ரீ சுரேந்திரநாத் பனர்ஜி மட்டும் தமது தந்தை யிடம் உத்திரவுபெற்றுக்கொண்டு பிரயாணமானர். ஆக மூவரும் 1868-ம் ஷு மார்ச்சுஸ் 3-ம்வ இங்கிலாந்துக் கேகுவாராயினர். இம்மூவருடைய நோக்க மும் ஐ. ஸி. எஸ். பரீக்ஷையில் தேர்ச்சியடையவேண்டு மென்பதே.

## 3. இங்கிலாந்து வாசம்.

இம்மூவருடைய மனோபீஷ்டமும் நிறைவேறினவாயினும், ராமேசசந் திரரும், விகாரிலால் பாபுவும் உத்தியோகத்திலேயே தமது வாழ்வின் பெரும் பாகத்தைக் கழித்தனர்; சுரேந்திர நாதர், வங்கமாதேவியின் வரப்பிரசாதி யாய் விரையில் உத்தியோகத்தினின்றும் விலகி தேசசேவையின் முன்னணி யில் நிற்கும் பாக்கியத்தை யடைந்தார். 1869-ம் வருடம் நடந்த இந்தியன் ஸிவில் சர்வீஸ் பரீக்ஷையில் முந்நூறுக்கு மேற்பட்ட ஆங்கிலேய மாணவர் கள் போட்டியினிடையே இம்மூவரும் தேறினர்கள். அதில் ராமேசர் மூன் ருவதாகத் தேர்ச்சி பெற்ருர்; ஆங்கில இலக்கியத் தேர்வில் அவர் ஆங்கி லேய மாணவர்க ளனைவரையும் பின்னடையச்செய்து முதன்மையாக விளங்கினர்.

பரீக்ஷை கொடுத்தானதும் ராமேசதத்தர் தம்மிரு தோழர்களுடன் உல் லாசமாக ஐரோப்பாக்கண்டத்தைச் சுற்றிப்பார்க்கப் பிரயாணப்பட்டார்,

முதலில் அவர்கள் 1871-ம்வருஷம் ஆகஸ்டு மாதத்தில் பிரஞ்சுதேசத்தின் தலைநகரான பாரினி லழகிய பாரிஸ் பட்டணத்தை யெய்தினர். அப்பொழுதுதான் 1870-71-ம் ஆண்டின் பிரஞ்சு யுத்தம் முடிவடைந்திருந்தது. ஆனாலும், பிரான்ஸ் தேசத்தில் அமைதியும் சமாதானமும் அவ்வமயம் ஏற்பட்டிருக்கவில்லை. 'கம்யூனலிஸ்ட்' கக்ஷியார் அப்பொழுது, நகரத்தினை யலங்கரித்து அழகா யமைந்திருந்த மனோகர மாளிகைகளை யெல்லாம் தரைமட்டமாக இடித்துத் தகர்த்து அட்டூழியஞ் செய்துகொண்டிருந்தார்கள். அவர்களை யுத்தவீரர்கள் வெடிகுண்டுப் பிரயோகஞ்செய்து வீழ்த்திக்கொண்டு மிருந்தார்கள். இப்படிப் பாரிஸ் நகரிலே பெரும் அமளியாயிருக்குஞ்சமயத்தில் ராமேசர் தமது நண்பர்களுடன், பாரிஸிலிருந்து 'மார்செவில்ஸ்' என்னும் மத்ய தரைக் கடல் மூலையைப் பார்க்கச் சென்றார். அப்பொழுது பிரஞ்சு வீரர்கள், இவர்களை கம்யூனலிஸ்ட் கட்சியாருக்கு அனுதாபங்காட்ட வந்தவர்களென் றையுற்றுச் சிறைப்பிடித்தார்கள். இங்ஙனம் மூவரும் ஓரிரவு சிறைக்கோட்டத்திருந்து, பின்பு தாம் சந்தேக பாத்திரர்களல்ல ரென்பதைத் தங்கள் 'பாஸ்போர்ட்' டைக்கொண்டு நிரூபித்து, விடுதலை யடைந்தார்கள். இவர்கள் இன்னுஞ் சில தினங்கட்குமுன் பாரிஸ் நகரில் பிடிபட்டிருந்திருப்பார்களேயாயின் அந்நகரக் கல்லறையில் விளங்க நேர்ந்திருக்கும்.

### 4. உத்தியோக மாட்சிமை.

பிறகு அவர் இந்தியாவுக்குத் திரும்ப 1871-ல் வங்காளத்தில் ஸிவில் சர்விஸில் நியமிக்கப்பெற்று ஓராண்டுவரை வங்காளத்தின் வெவ்வேறு ஜில்லாக்களில் வேலைபார்த்து வந்தார். அப்பால் 1874-ல் நதீயா என்னும் நவத்வீப ஜில்லாவில் கொடிய பஞ்சம் ஏற்பட ராமேசர் பஞ்ச நிவாரண காரியத்தில் நியமிக்கப்பட்டார். அதுவே தமக்குக் கிடைத்தபாக்கிய மென்று அவர் மக்களின் வறுமையைப் போக்கப் பெரிதும் பாடுபட்டு வந்தார். இப்படியிருக்கையில் 1876-ம் வருஷத்தில் வீசிய பெரும் புயற்காற்றில் வங்காளத்தில் கீழ்வட பாகங்கட்குப் பெருத்த நஷ்டமேற்பட்டது ; பாகர் கஞ்சத்திற்குத் தெற்கிலுள்ள ஷாஹபராஜபூர் தரைமட்டமாகிப் பிணக்காடாய் விட்டது ; நவத்வீபங்களிலும் பிணக்குவியல்களே காணப்பட்டன ; தெருக்களிலும் சாலைகளிலும், கழனிகளிலும் சவங்களே தென்பட்டன ; குளங்குட்டைகளிலும் கிணறுகளிலும் நதிகளிலும் பிரேதங்களே மிதக்கலாயின ; கீழ் வங்காளமெங்கும் இவ்வளவவ்வளவென்று எண்ணுவதற் கடங்காப்பிரேதங்கள் நாற்றம் வீசின ; எஞ்சிய ஜனங்கள் இருக்க நிழலற்று உண்ண உணவின்றிப் பரிதபிக்கலாயினர். இவ்வமயத்தில் ஷாஹபராஜபூரில் ராமேசதத்தர் அமைதியை யுண்டுபண்ணி, ஜனங்களின் துயரத்தைத் தள்ளி, தேச மகாஜனங்களாலும் துரைத்தனத்தாராலும் புகழப்பெற்றார். இன்னணம் தத்தர் பதினோராண்டுகள் சிறக்க ஸிவில்சர்விஸில் உத்தியோகம் பார்த்தார். இவருடைய திறமையை மெச்சி அரசாங்கத்தார் இவரை இரண்டொருமுறை தாத்காலிக ஜில்லா மாஜிஸ்டிரேட் உத்தியோகம் பார்த்து வரும்படி நியமித்தார்கள்.

அதன்பின், அவர் கொஞ்சகாலம் பாரிசாலில் மாஜிஸ்டிரேட் வேலை பார்த்து வந்தார். எப்பொழுதும் பாரிசாலில் கலவரமும் கொலையும் அதிகரித்து அமைதியற்றிருக்கும். அதனால் ராஜாங்கத்தாருக்கு வங்காளத்தின் அப்பாகத்தைப் பொறுத்த அளவில் நல்ல அபிப்பிராயமில்லாதிருந்தது. அப்பொழுது ராஜரீக நிபுணத்துவமும், மக்களின் உண்மையான குறைகளை உட்புகுந்தறிந்து உபசாந்தி செய்யும் உரமும் வாய்ந்த நமது ராமேசரை அரசாங்கத்தார் விஹார நாட்டின் தலைவராக்கினார்கள். அவர் தமக்குக் கீழ்வேலைபார்க்கும் போலீஸ் இலாகா அதிகாரிகள் நீதிபதிகள் வைத்திய இலாகாத்தலைவர் முதலான உயரிய பதவிகளைவகிக்கும் ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களை யெல்லாம் அனுசரித்துக்கொண்டு திறமையுடன் நிர்வகித்து, அப்பாகத்தில் அமைதி நிலவச் செய்தார். அவரது நிர்வாக வல்லமையைப் பற்றி துரைத்தனத்தார் தமது ராஜாங்கப் பத்திரிகை (Gazette)யில் புகழ்ந்திருந்தனர்.

## 5. கௌரவ சம்பிரமங்கள்.

அப்பொழுது ராஜப்பிரதிநிதியாய், இந்தியாவிடத்தில் அந்தரங்க அனுதாபமுடையவராயிருந்த அப்பன்—லார்ட் ரிப்பன் அவர்கள், ராமேசரை ஒருமுறை அழைத்து பேட்டி கொடுத்து "நான் எனது ஜென்ம பூமிக்கேகுமுன் தம்மை ஒருமுறை பார்க்கவேண்டுமென்ற அவாவினால் அழைத்தேன்; தமது பரிபாலன சக்தியை சீமையிலுள்ள ராஜரீக நிபுணர்கள் அறிந்து, இந்தியர்களுக்கு நிர்வாக சாமார்த்திய முண்டோ? என்று தங்களுக்கிருந்த சம்சயம் நிவர்த்தியாயிற்றென்று எனக்கு வரைந்துள்ளார்கள்" என்று மெச்சுப் பேச்சுப்பேசி யனுப்பினார். மற்றும் இவர் விகார நாட்டுத் தலைவராயிலங்கிய நாட்களில் எவ்வாறு ராஜ்ய பரிபாலனஞ் செய்யவேண்டுமென்பதை ஓர் நிகழ்ச்சியினின்றும் குறிப்பாக உணர்த்தினமையால் அரசாங்கத்தார் அவரை ராஜப் பிரதிநிதியின் சட்ட நிரூபணசபையில் அங்கத்தினராயமரச் செய்தார்கள். வல்லவனுக்குப் புல்லுமாயுதமல்லவா ? இதுவே தாயன்பைத் தனயன் வெளியிடத்தக்க தருணமென்றோர்ந்த ராமேசர்—வங்காள வேளாண்மைத் தொழிலாளரின் கஷ்ட நிஷ்டூரங்களை இளமை முதலுணர்ந்து அது சம்பந்தமான நூல்களை வரைந்துகொண்டிருந்த அவர் குடிமுறைமைச் சீர்திருத்தசட்டத்தின் பல அம்சங்களைப் புதுக்கப் பாடுபட்டுவந்தார். இதனிடையே அவர் சந்தர்ப்பம் வாய்த்தபொழுது இங்கிலாந்துக்கு இரண்டொருதடவை சென்றார். அப்பால் 1892-ம் ஆண்டில் அவருக்கு 'இந்திய சம்ராட நேசன் (Commander of the Indian Empire) என்ற பட்டமளிக்கப்பட்டது. பின்னர், அவர் 1897-ல் தமது பதவியினின்றும் நீங்கி உபகாரச் சம்பளம் பெற்றுக் கொண்டார். இதற்கிடையில் இந்திய ஜாதீய மகா நாடொன்று கல்கத்தாவில் நடைபெற, அதற்கு ராமேசர் தலைமை வகித்தார். இங்ஙனம், அவர் அரசாங்க பதவியிலிருந்தும் விலகியமை யறிந்த பரோடா மன்னர் அவரை அழைத்து அமைச்சராக அமர்த்திக் கொண்டார். அதைவகித்து, மன்னரும் மக்களும் மகிழப் பரிபாலித்து வருங்

கால், இடையில், ராஜரீகப் பிரிவினை ஆலோசனைக் கூட்டத்தில் (Decentralisation Committee) பங்காளியாயிருந்து உழைக்கக் கொஞ்சகாலம் பதவியைவிட்டு நீங்கியிருந்து மறுபடியும் ஏற்றுக்கொண்டு பரிபாலித்து வந்தார்.

## 6. பாஷா ஞானம்.

ராமேச சந்திர தத்தர் சமிஸ்கிருத பாஷா நிபுணரென்பதை நாம் முன்னமே குறிப்பிட்டுள்ளோம்; அவர் அம்மொழி நூல்களை ஆழ்ந்து ஆராய்ந்து கற்றவர். வங்கமொழியின் உயர்வை எடுத்தோதி, வங்காளிகளின் உள்ளமாகிய கழனியில் பாஷாபிமானத்தைப் பயிர் செய்தவரும் அவரேயாவர். ஆங்கில இலக்கியங்களில் அவருக்குச் சிறந்த பாண்டித்யமுண்டு. சரித்திர சாஸ்திர ஆராய்ச்சிகளில் அவரது வன்மை உலக மறிந்தது. சமயப்பற்றும் சதாசாரமும் அவரிடத்தில் குடி கொண்டிருந்தன. அவர் 1893-ம் வருடத்தில் வங்க சாஹித்ய சங்க மொன்றை ஸ்தாபித்து பாஷா சீர்திருத்தங்கள் செய்ததன்றி கலாசாலைகளில் வங்கமொழியை உயர்ந்த வகுப்பு மாணவர்கட்குக் கட்டாய பாடமாக வைக்கச் செய்தார். மேலும் அவர் வங்க பாஷையில் 'ஆக்ரா நகரத்து சேவினிராணி' என்ற ஓர் நவீன கதையையு மெழுதினர். ஆங்கிலத்தில் 'தேன்னைத் நாடகம்,' 'விமலா' என்னும் நவீனங்களும் அவரால் வரையப்பெற்றனவே. அவர் தமதாயுட்காலத்திற் செய்த விசேஷ காரியங்களில் ரிக்வேதத்தை வங்கபாஷையில் மொழிபெயர்த்தது மொன்ருகும். வடமொழி நூல்களை ஆதாரமாகக்கொண்டு, பொய்யான சரித்திர பாகங்களை நீக்கி ரஸமான சரித்திராம்சங்களை இனிமைப்பட விளக்கி, சத்யமான சரித்திரத்தை வெளியிடவேண்டுமென்று சில அன்பர்கள் அவருக்கிருந்த ஆர்வத்தைத் தூண்ட, அவர் 'பூர்வீக ஹிந்துக்களின் நாகரிகம்' என்ற விதானமுள்ள சரித்திர நூலை எழுதினர். அந்நூல் இன்றளவும் தமிழ் பயிலத் தொடங்கும் மாணவர்கட்குத் தலை நின்றுதவும் நன்னூல்போல, சரித்திர மாணவர்களின் முதல்நூலாக விளங்குகின்றது. மற்றும், அவர் வரைந்து போந்த 'கர்ஸன் பிரபுவிற்குப் பகிரங்க கடிதங்கள்,' 'பூர்வகால ஹிந்துக்களுடைய சரிதையின் கால நிலை,' 'விக்டோரியா மகாராணியாரின் ராஜ்ய பரிபாலனம்' ஆகிய நூல்கள் அவரது விசாலமான மனோபாவத்தையும், அதிநுட்ப ஆராய்ச்சி வன்மையையும் காட்டி நிற்கின்றன. 'இந்திய குடிகளின் நிர்வாக சரித்திர' மென்று அவர் வெளியிட்ட நூல் அவருடைய சர்வஜன அன்பையும், அனுதாபத்தையும் விளக்கப்போதிய சான்ருயுள்ளது. இன்னும் அவர் ஸ்ரீமத் இராமாயண மகாபாரத காவியங்களை வடமொழியிலிருந்து ஆங்கிலத்தில் இசைநோக்குடன் மொழிபெயர்த்துள்ளார். இவை ஜெகப்பிரியர் கவன சக்தியையும் அடக்கி மேலெழுந்தன்மையன.

## 7. சம்பூர்ணம்.

அந்தோ! எத்துணை மேதாவியாயிருந்தாலுமென்ன! துஞ்சினரென்றெடுத்துத் தூற்றப்பட்டாரல்லால் எஞ்சினர் இவ்வுலகத்தி லில்லையன்றே? "எவராயிருந்தாற்ருன் எனக்கென்ன? அவர்களைக் கவர்ந்து செல்வேன்"

என்று கால மறிந்து உயிரைக் கோள் இழைக்கும் காரணத்தில் 'காலன்' எனும் அரிய காரணப்பெயரைச் சாலப்படைத்த இயமன் வந்து விடுகிறு னன்றோ? வங்க நாட்டின் வரபுத்ரராய் அவதரித்த இப்பெரியாரையும் அக் கொடும்பாவி 1909-ம் வருடம் நவம்பர் மாதம் 31-தேதி செவ்வாய்க்கிழமை யன்று அழைத்துச் சென்று விட்டான். ஆகா! தம் நாட்டு மக்களிடத்தில் அவர் கொண்ட தயை என்ன! ராஜாங்க பதவிகளை அவர் நிர்வகித்த திறமை யென்ன? 'அமரர் அன்று அமுதமுண்டார்; இன்று நாமுண்டோம்' என்றனை வரும் புகழ்ந்து கொண்டாடிய மதுரமான சொற் பொழிவுகளியற்றும் அவர் சொகுசுதான் என்ன! ரிக் வேதத்தை வங்காளியில் மொழி பெயர்த்த அவர் பாஷாபிமான மென்ன! ஆங்கில இலக்கிய நூல்கள் பலவற்றை ஆக்கித்தந்த அவரது அருளென்ன! கர்மயோகியைப்போல் தமது கடமைகளினின்றும் வழுவாத கம்பீரமென்ன! வாழ்க்கையின் எந்தத்துறையிலும் ஏற்றத் தாழ்வின்றி ஆனைத்திலும் அழியாப்புகழெழுப்பிய அவர் ஏற்றமென்ன! அவ ருடைய வாழ்க்கையின் யோக்கியதாம்ஸங்களில் எதைத்தான் நாம் பூரண மாகப் புகழவல்லோம். அவருடைய கர்ம வாழ்க்கையின் பிரகாசமான ஞாப கம், துருவ நட்சத்திரத்தைப்போல, நமது சத்ய வாழ்வினுக்குச் சரியான காட்டியாய் நின்று நிலவுவதாக!

ஸ்ரீ லக்ஷ்மீகாந்தன்.

---

## ஆனந்த போதினி வாழ்த்து.

பேர்வளர் பரதப் பார்புகழ் கண்டத்
தேர்வளர் செல்வச் சீர்மத ராஸில்
நாமகள் அருளான் நா. முனிசாமிப்
பூமகன் புரக்கும் புனித நற்றுளாம்
தேனென இனித்திடும் ஆனந்த போதினி
தானிந்தத் தாணியிற் றகுமா னிடர்க்குத்
தானமும் தயையும் தண்மையு மோங்கிட
கோனுயர் நந்தமிழ் வானுற வளர்ந்திட
ஞானமும் சீலமும் நாடொறும் சிறப்புறற்(கு)
ஆனநற் பொருள்களும் அல்லா தின்னும்
எண்டிசைக் காட்சியும் இயைந்த விநோதமும்
பெண்டிர்தம் சிறுரைப் பேணும் பெற்றியும்
அணியாம் கற்பினை அன்னார் காத்தலும்
பிணியினைப் போக்கலும் பெருமையை ஆக்கலும்
ஊதியம் பெறுதற் குகந்தநன் னெறிகளும்
ஆதிய பொருள்களை அறிவுற விளக்கிடும்
சித்திரப் படத்துடன் செவ்விதின் வெளிவரும்
சத்திய நன்னிலை சால்புறச் சாற்றிடும்
உலகில் "எம்மதமும் சம்மதம்" என்பதை
இலகுற விளக்கிடும் இம்மதிச் செந்தாள்!
ஆதலால் யாமிதை அன்பொடு
ஓதலே நன்றென உணர்மின்! உணர்மினே !!

K. N. இராமசாமி.

---

# வேதாந்த ஸித்தாந்த லேச சங்கிரகம்.

1. பிரகதாரண்யக உபநிஷத்தில், இரண்டாவது அத்தியாயத்தில், நான்காவது பிராம்மணத்தில், சிறந்த பிரம்மக் ஞானியாகிய யாக்யவல்க்கிய முனிவர், மைத்ரேயி, காத்யாயினி என்ற தமது இரு மனைவியர்களில் மைத்ரேயியைப் பார்த்து, "ஓ மைத்ரேயி! நான் இல்லறத்தை விட்டுத் துறவியாகப் போகின்றேன்; ஆகையால் உனக்கும், காத்யாயினிக்கும் சொத்துக்களைப் பாகம் செய்து வைக்கிறேன்" என்று சொன்னார். அதற்குப் பதிலாக மைத்ரேயி, "மோக்ஷத்திற்குக் காரணமில்லாத சொத்துக்களால் எனக்கு என்ன பலன்? ஆகையால் நான் எதனால் மோக்ஷத்தை யடைவேனோ அதை எனக்குக் கொடுக்கவேண்டும்" என்று கேட்டாள். முனிவர், "ஆத்மாவா அரேதிருஷ்டவ்யః ஸ்ரோதவ்யః மந்தவ்யః நிதித்யாசிதவ்யః" என்று உபதேசம் செய்தார்.

2. இதில், "ஆத்மவிசாரம் செய்யவேண்டும்; மனனம் செய்யவேண்டும்" என்று விதி, விதிக்கப்பட்டிருக்கிறது. அந்தவிதி என்னவிதி என்று விசாரிப்போம்.

3. அபூர்வவிதி, நியமவிதி, பரிசங்கியாவிதி என்று விதிகள் மூன்றுவிதம். முன்காலத்திலும் எவ்விதத்திலும் தெரியாத சமாசாரத்தை உணர்த்தும் விதிக்கு அபூர்வவிதி என்று பெயர்; (உதாரணம்) "விரீஹீனப்ரோக்ஷதி" என்பதற்கு "நெற்களை ப்ரோக்ஷணம் செய்யவேண்டும்" என்பது அர்த்தம். இதில், "யாகத்தில் உபயோகமாகும் நெற்களை ப்ரோக்ஷணம் செய்யவேண்டும்" என்னும் கருத்து அடங்கியிருக்கின்றது; இது எவ்விதத்திலும் அறியப்படாத சமாசாரம். ஆகையால் இது அபூர்வவிதி. "ஒன்றை இரண்டுவிதமாகவும் செய்யலாம்" என்ற நியமம் இருக்கும்பொழுது, "ஒருவிதமாகத்தான் செய்யவேண்டும்" என்று சொல்வது நியமவிதி. (உ-ம்) "நெற்களைக் குத்தவேண்டும்" என்பதில், "நெற்களை நகத்தால் உரித்து அரிசியாக்கலாம், உரல் உலக்கையால் குத்தியும் அரிசியாக்கலாம்" என்ற இரண்டு வகைகளிருக்கின்றன. இவற்றுள் "உரல் உலக்கையைக்கொண்டுதான் அரிசியாக்கவேண்டும்" என்று சொல்லுவது நியமவிதி. இரண்டில் ஒன்றை விலக்கும் விதி பரிசங்கியாவிதி. எப்படியென்றால் அக்னிசயனத்தில் 'இமாம் அக்ருப்ணன் ரசனும் ரிதஸ்யஇதி அஸ்வாபிதானீம் ஆதத்தே" என்ற வாக்கியம் கழுதையின் கடிவாளத்திலும், குதிரையின் கடிவாளத்திலும் எதைப் பிடிப்பது என்று சந்தேகம் உண்டானவிடத்துக் கழுதையின் கடிவாளத்தைப் பிடிக்கக்கூடாது என்று விலக்குகிறது. ஆகையால் இது பரிசங்கியாவிதி.

4. இவ்வாறு மேற்சொன்ன மூன்றுவிதமான விதிகளில் 'ஸ்ரவணம் செய்யவேண்டும்' என்ற விதி எவ்விதத்தைச் சேர்ந்ததென்று விசாரிப்போம். ஸ்ரவணம் செய்யவேண்டுமென்றவிதி அபூர்வவிதிதான். இந்தவிதிக்கு முன் பிரம்மசாக்ஷாத்காரத்திற்கு வேதாந்த ஸ்ரவணம் காரணம் என்று சொல்லும் பிரமாணம் ஒன்றுமில்லையாதலால் இது அபூர்வவிதி.

5. "ஜுஷ்டம் யதாபஸ்யதி அன்யமீசம் அஸ்யமஹிமானம் இதிவீத சோகஃ" என்ற வாக்கியத்தைப் பார்த்து, ஜீவாத்ம, பரமாத்ம பேதஞானம் மோக்ஷத்திற்கு ஹேதுவென்றெண்ணி, மோக்ஷத்திற்கு ஹேதுவான ஞானத்தை அடைய ஜீவாத்ம, பரமாத்ம பேதத்தைப் போதிக்கும் சாஸ்திரத்தை அப்பியாஸம் செய்யலாம். அதைத் தடுப்பதற்காக ஜீவாத்ம, பரமாத்ம ஐக்கியத்தைச் சொல்லும் சாஸ்திரத்தைத்தான் அப்பியாஸம் செய்யவேண்டுமென்று சிலர் சொல்கின்றனர். இது நியமவிதி.

6. பிரம்மக்கியானத்தையடைய வேதாந்த ஸ்ரவணம் செய்பவனுக்கு வேறு விஷயங்களிலும் பிரவர்த்தி ஏற்படலாம். அதை விலக்கவேண்டுமென்று சிலர் கூறுகின்றனர். இது பரிசங்கியாவிதி.

7. இப்படி இவ்வாக்கியத்தால் பிரம்மஞானியாகிய யாக்யவல்க்கிய முனிவர் பிரம்ம விசாரம் செய்யவேண்டுமென்றும், அது மோக்ஷத்திற்குக் காரணம் என்றும், தமது மனைவியாகிய மைத்ரேயிக்கு உபதேசித்தார்.

8. பிரம்ம விசாரம் செய்பவனுக்கு நான்கு குணங்கள் இருக்கவேண்டும் என்று கூறப்படுகிறது. அவை (1) "நித்யா நித்யவஸ்து விவேக:" அதாவது, அழிவற்றதும் அழிவுள்ளதுமான பொருள்களும் அவைகளின் குணங்களும் இன்னவையென்றறிதல் (2) "இகாமூத்ரார்த்த பல போக விராக:" அதாவது மண்ணுலகு, விண்ணுலகு ஆகியவற்றின் வாழ்க்கையில் வெறுப்பு. (3) சமாதிகுணங்களின் நிறைவு; அதாவது சமம், தமம், உபாதி, திதிக்ஷை, சமாதானம், சிரத்தை ஆகியவற்றைக்கொள்ளல்; (மனதை அடக்குவது சமம்; ஏனைய இந்திரியங்களை அடக்குவது தமம்; உலக போகத்தை வெறுத்து இருத்தல்-உபரதி; சுகம், துக்கம், சீதம், உஷ்ணம், ஜெயம், அபஜெயம், முதலியவைகளைப் பொறுத்தல்-திதிக்ஷை, வெவ்வேறு விஷயத்தில் மனதைச் செலுத்தாமல் ஒரேவிஷயத்தில் செலுத்துவது சமாதானம்; குருவினிடத்தும் வேதாந்த வாக்கியங்களிலும் நம்பிக்கை-சிரத்தை. உபாதி என்பதைக்கொண்டு சந்நியாசிகளே பிரம்மவிசாரம் செய்யத்தக்கவரென்று சிலர் கருதுகின்றனர். ஜனகர் முதலிய ராஜ்யத்தை ஆண்ட அரசர்களும் வேதாந்த விசாரம் செய்திருப்பதாக பிரகதாரண்யகம் முதலிய உபநிஷத்துக்களால் தெரிவதால் ஒன்றிலும் ஆசையில்லாமல் இருத்தலே உபரதி என்று பொருள் கூறுவதே ஏற்றதாகும்.) 4 "முமுக்ஷுத்வம்" அதாவது மோக்ஷத்தில் ஆசை என்பனவாம். இந்த நான்கு குணங்களு முடையவன் பிரம்ம விசாரத்திற்கு அதிகாரி யாவான். 'யாதோவா இமானி பூதானி' என்ற வாக்கியம் ஜகத்துக்கு ஜன்மகாரணம் பிரம்மமென்றும், ஸ்திதிகாரணம் பிரம்மமென்றும், லயகாரணம் பிரம்மமென்றும் அப்படி விசாரிக்கப்படும் பிரம்மலக்ஷணத்தைக் கூறுகிறது.

9 ஜகத்திற்குச் சுத்தப் பிரம்மம் காரணமா? ஈசுவர ரூப பிரம்மம் காரணமா? ஜீவன் காரணமா? என்று விசாரிப்போம். சம்க்ஷேபசாரீரகத்தில் சுத்தப்பிரம்மம்தான் ஜகத்திற்குக் காரணமென்றும், அப்படியே ஜன்மாதி சூத்திரத்திலும் பாஷியத்திலும் சுத்தப் பிரம்மத்திற்கு ஜகத் காரணத்துவம்

லக்ஷணம் என்று ஆசாரியர் சொல்லுகிறார் என்றும் தீர்மானம் சொல்லப் பட்டிருக்கிறது. விவரணத்தில் மயாசபலிதமான ஈசுவரரூபப் பிரம்மம் ஜகத்திற்குக் காரணம் என்று சொல்லப் பட்டிருக்கிறது. அப்படியே "அந்தஸ்தத் தரமோபதேசாத்" என்ற அதிகாரணங்களில் சங்கர பாஷியத்தில் ஜகத்துக்குக் காரணமானது பிரம்மம் என்று சொல்லப் பட்டிருக்கிறது.

10. இப்பொழுது ஈசுவரன் என்பது யார்? ஜீவன் என்பது யார்? என்று விசாரிப்போம்: அநாதியாய் சத் என்றும் அசத் என்றும் சொல்ல முடியாம லிருக்கும் மாயையில் பிரதிபிம்பித்த சைதந்யம் ஈசுவரன் என்றும், பரிச்சின்னமாயும், ஆவரணசக்தி விக்ஷேப சக்தி என்ற இருவகைச் சக்திகளை உடையதாயும் அவித்தையில் பிரதிபிம்பித்த சைதந்யம் ஜீவன் என்றும் கூறப் படுகிறது. "கார்யோபாதிரயம் ஜீவஃ காரணோபாதிரீசுவர" என்ற வேத வாக்கியத்தை ஒட்டி அவித்தையில் பிரதிபிம்பித்த சைதன்யம் ஈசுவரன் என்றும், அந்தக்கரணத்தில் பிரதிபிம்பித்த சைதந்யம் ஜீவன் என்றும் எண்ணியப் படும். பஞ்சதசப்ரகரணத்தில், சித்ர தீபத்தில், ஜீவன், ஈசன், விசுத்தசைதன்யன் என்று மூன்று விதமாகச் சொல்வதை விட்டுவிட்டு எப்படிக் கடத்தில் இருக்கும் (குடத்திலிருக்கும்) ஆகாயத்தை கடாகாயம் என்றும், அதில் இருக்கும் ஜலத்தில் மேகங்களுடனும், நக்ஷத்திரங்களுடனும் பிரதிபிம்பித்த ஆகாயத்தை ஜலாகாயம் என்றும், இதைத்தவிர மகாகாயம் என்றும், அந்த மகாகாயத்தின் மத்தியில் மேகமண்டலத்தி லிருக்கும் ஜலத்தில் பிரதிபிம்பித்த ஆகாயத்தை மேகாகாயம் என்றும் நான்கு விதமாகச் சொல்லலாமோ, அப்படியே ஸ்தூல தேகத்திற்கும், சூக்ஷ்ம தேகத்திற்கும் அதிஷ்டானமாக இருக்கும் சைதந்யம் கூடம்போல் அசைவில்லாமல் இருப்பதால் கூடஸ்தன் என்றும், அந்த கூடஸ்தனில் கற்பிக்கப்பட்ட அந்தக்கரணத்தில் பிரதிபிம்பித்த சைதந்யம் ஜீவன் என்றும், அந்தக்கரணத்தில் பிரதிபிம்பத்தை அடையாத சைதந்யம் பிரம்மமென்றும், அந்த சைதந்யத்தை ஆசிரயித்த மாயையாகிய இருட்டிலிருக்கும் பிராணிகளின் புத்தி வாசனையில் பிரதிபிம்பித்த சைதந்யம் ஈசுவரன் என்றும் சொல்லப் பட்டிருக்கிறது. சத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்று குணம் மூன்று. குணரூபமான மூலப்பிரகிருதிக்கு மாயை என்றும், அவித்தை என்றும், இரண்டு உருவங்கள் இருக்கின்றன. சுத்த சத்வகுணப் பிரதானமாக விருந்தால் மாயை என்றும், மலினமான சத்வகுணப் பிரதானமாக விருந்தால் அவித்யை என்றும் மாயைக்கும் அவித்யைக்கும் வேற்றுமை கற்பித்து, மாயையில் பிரதிபிம்பித்த சைதந்யம் ஈசுவரன் என்றும், அவித்யையில் பிரதிபிம்பித்த சைதந்யம் ஜீவன் என்றும் சிலர் கூறுகின்றனர். வேறு சிலர் மூலப்பிரகிருதி ஒன்றுதான்: விக்ஷேபசக்தி யென்றும் ஆவரண சக்தி யென்றும், இரண்டு சக்திகளிருக்கின்றன; விக்ஷேபசக்தி பிரதானமாக இருந்தால் மாயை என்றும், ஆவரணசக்தி பிரதானமாக விருந்தால் அவித்யை என்றும் அந்த மாயையில் பிரதிபிம்பித்த சைதந்யம் ஈசுவரனென்றும், அவித்யையில் பிரதிபிம்பித்த சைதன்யம் ஜீவன் என்றும் சொல்லுகின்றனர்.

(தொடரும்) பண்டிதர். K. V. தேவராஜ சாஸ்திரியார்.




## புஷ்ப ரஸம்.

(LIQUID EXTRACT OF FLOWERS.)

### கைகண்ட முறைகள்.

செய்முறை போது:—புஷ்பரஸமென்பது மலர்களின் சத்து. இதனை எடுக்கும் முறை வெகு சாதாரணமானதே. ரஸமிறக்குவதற்கெனத் தெரிந்தெடுக்கப்பெற்ற மலர்கள், இதழ்கள், இலைகள் முதலிய வாசனை பொருந்திய வஸ்துக்களைக் கொடி, தண்டு, மொட்டுகள் முதலியவற்றை நீக்கிச் சுத்த ஜலத்தால் கழுவவேண்டும். பிறகு அவற்றைக் கொஞ்ச நேரம் தண்ணீர் நிறைந்த ஓர் பாத்திரத்தில் இட்டு நன்றாக ஊறும்படி மூடிவைத்தல்வேண்டும். அடுத்த படியாக நீராவி பூர்வமாக அவற்றைக் கஷாயம்போலக் காய்ச்ச வேண்டும். இங்ஙனம் காய்ச்சுங்கால் ஒரே சீராக-கிரமமாக உஷ்ணப்படுத்தினாலல்லாது பலன் திருப்திகரமானதாயிராது. காய்ச்சுங்கால் எவ்வளவுக் கெவ்வளவு நீராவி அதிகமாக உபயோகப்படுத்தப்படுகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு அந்நீராவி வெளியே செல்லுதற்பொருட்டு அப்பாத்திரத்தின் மூடி திறந்து வைக்கப்படவேண்டும். அப்பால், அடையப்படும் ரஸத்தை எச்சரிக்கையோடு சீதளப்படுத்திக் குப்பிகளில் நிரப்பவேண்டும். இம்முறையில் கொதிபாத்திரமாக மட்பாண்டத்தையோ அலுமனியப் பாத்திரத்தையோ உபயோகித்தல் வேண்டும். இப்புஷ்ப ரஸத்தை நீடித்தகாலம் மணம் குணங் கெடாமல் வைத்திருக்கவேண்டுமாயின் அந்த ரஸத்தோடு நாலைந்து சொட்டு மதுசாரத்தைக் (Spirit) கலக்க வேண்டும்.

உபயோகம்:—இவ்விதம் எடுக்கப்படும் புஷ்பரஸம் பலவகையிலும் உபயோகிக்கப்படுகின்றது. 'சிகரெட்டின்' அருவருப்பான நாற்றத்தைப் போக்கவும், சுருட்டுக்கு நறுமணத்தை யூட்டவும், வாசனைப் புகையிலையிற் சேர்க்கவும், கோடைகாலப் பானங்களில் மணமூட்டவும், மிட்டாய் முதலிய இனிப்பான பலகார வகைகட்கு நல்ல வாசனையும் ருசியும் ஏற்படுத்துவதற்கும் இந்தப் புஷ்பரஸம் மிகவும் உபயோகமானது. சொற்ப முதலுடையவர்களும் இத்தொழிலை மேற்கொண்டு நல்ல இலாப மடையலாம். மற்றும், வீடுகளில் இவற்றைச் செய்து வைத்துக்கொண்டு பலகாரங்கட்கு உபயோகிக்கலாம். சுருட்டுபுகையிலை வியாபாரிகள் இதனை உபயோகிப்பதால் நல்ல லாபமும் பெயரும் பெற்று வாணிபமும் சிறப்பாக நடத்துவதற்கு ஏதுவுண்டாகும். கைக்குட்டை, வஸ்திரம் முதலியவற்றிற்கு நல்ல வாசனை ஏற்றலாம்.

வகைகள்:—1. ரோஜா. அன்றலர்ந்த ரோஜாப் புஷ்பத்தின் தளதளப்பான இதழ்களைச் சுமார் 4 பவுண்டு (lb) எடுத்துச் சுத்தப்படுத்தப்பட்ட 20 பவுண்டு தண்ணீரை ஒரு பாண்டத்தில் நிரப்பி அதிற் சேர்க்கவும். அத்தண்ணீர் 6 பவுண்டளவு சுண்டும்வரை வாய்ப்பாட்டை மூடிக் கொதிக்க வைக்க வேண்டும். பின்னர் எடுத்துத் தூய துணி கொண்டு வடிகட்டவும். சக்கைகளை எறிந்துவிட்டு இறங்கிய ரஸத்தோடு 6 பவுண்டு குளிர்ந்த ஜலத்தைச் சேர்த்து, நீராவியினுதவியால் நன்றாகக் காய்ச்சவேண்டும். அவ்வாறு கொதிக்கும் திராவகம் ஒரு பவுண்டு எடையளவு வருகிறவரையில் காய்ச்சி அடுப்பி

விருந்து இறக்கித் தூசிபடாமல் காற்றூடவைத்துக் குளிர்ந்தவுடன் ஒரு ஜாடியிலிட்டு மூடிவைத்து விடவும்.

2. சண்பகம். சண்பகமலர் 12 பவுண்டு, சுத்த ஜலம் 20 பவுண்டு. ஆக இரண்டையுஞ் சேர்த்துக் காய்ச்சி, 5 பவுண்டு அளவு சுண்டியதும் எடுத்து முன் ரோஜாரஸத்துக்குக் கூறியவாறு வடிகட்டி, 7 பவுண்டு குளிர்ந்த ஜலம் சேர்த்து நீராவியால் சூடேற்றிக் கொதிக்கவைத்து, ஒரு பவுண்டு அளவுக்குச் சுண்டியவுடன் எடுத்துக் குளிரவைத்து ஒரு பாத்திரத்திலிட்டு வைக்கவும்.

3. தாமரை. தண்டு முட்கள் முதலியன நீக்கப்பெற்ற செந்தாமரையின் இதழ்கள் 10 பவுண்டை 16 பவுண்டு சுத்த ஜலத்துடன் சேர்த்து, ஓர் பாத்திரத்திலிட்டு மூடிக் கொதிக்க வைத்து, 2 பவுண்டு அளவு சுண்டியதும் எடுத்து வடிகட்டவும், வடிந்த ரஸத்தைச் சுத்தமான ஓர் பாத்திரத்திலிட்டு வைக்கவும். தாமரை ரஸம் எவ்வளவோ காரியங்களுக்கு உபயோகமானது. (இதை மருந்தாகவுங் கொள்வதுண்டு.)

4. எலுமிச்சை. பூச்சி புழுக்களற்ற 8 பவுண்டு எலுமிச்சம் பூக்களை 32 பவுண்டு சுத்தஜலத்துடன் ஓர் பாத்திரத்திற்போட்டு அவ்வேனத்தின் வாயை மூடிக் கொதிக்க வைத்து விடவும்; 6 பவுண்டாகச் சுண்டியவுடன் ரஸத்தை வடித்து 4 பவுண்டு தண்ணீர் சேர்த்து, நீராவியாற் காய்ச்சி 2 பவுண்டு நிறை எய்தியதும் எடுத்து ஆறவைத்துக் குப்பியிலடைத்து வைக்கவும்.

5. கிச்சிலி. (கித்திப்புக் கொளிஞ்சி நாரத்தை முதலியவற்றையும் உபயோகிக்கலாம்.) 4 பவுண்டு எடை பழத்தோலையும் 16 பவுண்டு சுத்த ஜலத்தையும் ஓர் பாத்திரத்திலிட்டு அடுப்பிலேற்றிக் கொதிக்க வைத்து 4 பவுண்டு அளவு சுண்டியதும் எடுத்து வடிகட்டித் தோற்றுண்டுகளை அகற்றி விட்டு 6 பவுண்டு தண்ணீர் சேர்த்து நீராவிவேகத்தால் காய்ச்சி ஒரு பவுண்டாகச் சுண்டியதும் எடுத்துச் சீதளமாக்கி வைக்கவும். மிட்டாய் அல்லது 'முரப்பா' செய்துவிற்பவர்கள் எலுமிச்சை ரஸத்தைப் பெரும்பாலும் உபயோகிக்கிறார்கள். அதற்குப்பதிலாக இதைச் சேர்த்தால் வெகு சுலபமாயிருப்பதோடு நல்ல மணமும் ருசியும் ஏற்படும். (இண்டஸ்டிரி.)

குறிப்பு:—பவுண்டு எடையையே உபயோகப் படுத்த வேண்டு மென்ற அவசியமில்லை. சராசரி அளவைக் காட்டவே இங்கு பவுண்டு எடை குறிப்பிடப்பட்டுளது. நீராவியால் காய்ச்சுதலாவது: சாதாரணமாக வீடுகளில் பலகாரவகைகளைச் செய்வது போலவே கொள்ளத்தக்கதாம். இனிப்புப் பலகாரவகைகட்கு விலையதிகமான குங்குமப்பூ, பச்சைக்கற்பூரம் முதலியன சேர்ப்பதற்குப் பதிலாக இப்புஷ்பரஸத்தைக் கூட்டின் மணமும் ருசியும் மிகுந்திருக்கும்.

## பாம்புக்கடிக்கு மருந்து.

இந்தியாவில் பாம்புக்கடிக்கு விசேஷமான மருந்துகள் சிலருக்குத் தெரிந்திருந்தும் அவர்கள் பொறாமையாலோ அல்லது சுயநலத்தாலோ அவற்றைப் பொது ஜனோபகாரார்த்தமாக பகிரங்கப் படுத்துவதில்லை. அத்தி பூத்ததுபோல் எவராவது எப்பொழுதாவது பத்திரிகைகளில் இதைப்பற்றி எழுதுகிறார்களானாலும் நிச்சயமாக அம்மருந்து அல்லது மூலிகை கிடைக்கு மிடம், அவற்றைக் கண்டுபிடிக்கும் அடையாளம், உபயோகிக்கும் விதம் முதலியவற்றைச் சரிவர அறிவிக்கின்றார்களில்லை. பாம்பாட்டிகள் என்னவோ வேரையும் மாத்திரைகளையும் வைத்துப் பாம்புகளைப் பிடித்துப் பழக்குகிறார்கள். அவ்வோர் பச்சிலைகள் முதலியவை உள்ள இடமும் அறிதற்குச்சாத்தி

யமாயில்லை. ஆதலின் எளிதில் கிடைக்கக் கூடியதும் யாவருக்குந் தெரிந்தது மான இரண்டு முறைகளை இங்கு குறிப்பிடத் துணிந்தேன். அவை யிரண்டும் பரீக்ஷிக்கப்பட்டுக் குணமுடையனவென்று நிர்ணயிக்கப் பெற்றவைகளாகும்.

இலங்கையில் சாதாரணமாக கொடிய விஷப் பாம்புகளின் கடிக்கு, இரண்டு 'டம்ளர்' வாழைமரத்தினடிப் பாகத்தை வெட்டுங்கால் சுரக்குந் தண்ணீரைப் பருகிவிடுகிறார்கள். இயல்பாக ஒன்றிரண்டு வாழைமரங் களின் அடியை வெட்டினாலே இரண்டு 'டம்ளர்' தண்ணீர் கிடைத்து விடும். அத்தண்ணீர் ஒருவிதமான கடுப்புள்ள சுவையினதா யிருக்கும். நூற்றுக்குத் தொண்ணூற்று நாலுபங்கு குணம் கைகண்டதெனச் சொல்லப் படுகின்றது. ஆனால் பாம்புகடித்த ஒன்றிரண்டு மணிநேரத்திற்குள் அந்நீரைப் பருகிவிட வேண்டும். பாம்புகளில் பச்சைப்பாம்பைத் தவிர மற்ற நாகம் முதலியவை வாழை மரத்தைத் தீண்டுவதில்லை; வாழை மரத்தைச் சார்ந்து அவை வசித்தலும் வெகு அபூர்வம். (வாழை மரத்தண்ணீர் அவ்விஷப்பாம் பிற்கு விஷமென்று பெரியோர் கூறுகின்றனர்.)

இரண்டாவதாக, கஞ்சாக் குடிக்கும் குழாயினடியில் ஒருவிதமான கரிய துரு அடைந்திருக்கும். இதுபோன்று புகையிலை குடிக்கும் குழாயினடி யிலும் படிந்திருக்கும். கஞ்சாக் குழாயின் அடியில் ஒரு கட்டிபோல் படிந்திருக் கும் துருவை எடுத்துக் கல்லில் தேய்த்தால் பழுப்பும் கருப்புங் கலந்த ஒருவித மான நிறமுள்ள பசைபோலாகும். அப்பசையைப் பாம்பு கடித்தவர்களின் உடம்பினுள் ஊசிகொண்டு செலுத்த வேண்டும். ஆங்கில வைத்திய முறைப் படியே ஊசியேற்ற (Injuct) வேண்டுமென்ற நியதியில்லை. பாம்புகடித்த விடத்தில் ஊசியாற் குத்திச் சிவந்த இரத்தம் வந்ததும் இந்தப் பசைபோன்ற மருந்தைவைத்து நன்றாகத் தேய்த்தால்போதும். சிலசமயம் சிவப்பு இரத்தம் காணுதற் பொருட்டு நாலைந்து இடங்களில் ஊசிகொண்டு குத்தவும் நேரும். கடித்து நேரமாகி விட்டால் கடித்த இடத்திற்குப் பக்கத்தில் செவ்விரத்தம் காணப்படாது; இரத்தம் தோன்றும் வரையில் குத்திப் பிறகு மருந்தைச் செலுத்தவேண்டும். (இண்டஸ்டிரி.)

ஸ்ரீ தான், திரிசிரபுரம்.

## சாமியை ஏய்த்தல்.

சிலர் கோவிலுக்குப் போய் ஒரு தேங்காய் உடைத்துக் காலணு கற்பூரங் கொளுத்திவிட்டு "ஈஸ்வரா! நான் செய் துள்ள பொய் வியாஜ்யம் ஜெயிக்கவேண்டும்! அதனால் வரும் லாபத்தில் நூறு ரூபாய்க்கு ஈசா! உமக்கு அபிஷேகம் செய்து வைத்துச் சர்க்கரைப்பொங்கல் நெய்யொழுக நைவேத்தியஞ் செய்கிறேன்' என்று என்னென்னவோ வேண்டிக்கொள் கிறார்கள். கடவுள் என்ன கமிஷன் ஏஜண்டா? ஒரு அணுத் தேங்காயால் அவரை ஏமாற்றிவிட நினைக்கும் மதிதான் என்ன! அவர்கள் சற்று யோசித்துப் பார்க்கட்டும். எப் பொழுதும் நைவேத்தியம் முதலியவற்றைப் பலாபேக்ஷை யின்றிச் செய்யவேண்டும். அதுவே உத்தமமானது!



(93-ம் பக்கத் தொடர்ச்சி.)

## உலக ஞானம்.

அரசனே! சம்பத்தை அடைந்து கிருகஸ்த தர்மத்திலிருக்கிறவன் இரத்த சம்பந்தமானபந்துக்கள், உயர்ந்த குடியிற் பிறந்து தரித்திரம் அடைந்தவர், ஏழையான சிநேகிதர்கள், சக்தியில்லாத சகோதரிகள் ஆகிய இந்த நால் வகையாரையும் கைவிடாம லிருக்கவேண்டும்.

தேவராஜனுகிய இந்திரன் தன் குருவாகிய பிரகஸ்பதி பகவானை நோக்கி வினவியபோது அவர், தேவநிர்ணயம், பெரியோர் பிரபாவம், கற்றவருடைய அடக்கம், பாவிகளின் நாசம் இந்நான்கும் ஒரேநாளில் பலன் தருமென்று கூறினர். அக்கினி ஹோத்திரம், மௌன விரதம், யாகம், படிப்பு இந்நான்கும் பயத்தை நீக்குவனவாம். இவைகள் சரியாய்ச் செய்யப்படா விட்டால் பயத்தை உண்டாக்கும். அரசனே! மாதா, பிதா, தெய்வம், ஆத்மா, குரு, இவ்வைவரும் நெருப்பை யொப்பர். ஆதலால் இந்த ஐந்து நெருப்புக்களையும் மரியாதைசெய்து வணங்கவேண்டும். கடவுள், பிதிர், யாச்கர், திதி இந்நால்வரையும் வணங்குகிறவன் இவ்வுலகில் மேலான புகழை அடைவான். சிநேகிதர், பகைவர், உபேட்சையா யிருப்பவர்கள், அடுத்திருக்கிறவர்கள், சம்ரக்ஷணை செய்வதற்குரியவர்கள் இவ்வைவரும் எங்கேபோனலும் கூடவே வரத்தக்கவர்கள்.

மனிதருடைய ஐம்புலன்களும் துளையுள்ளனவா யிருக்கின்றன. மனிதனுடைய அறிவு துளையுள்ள தோற்பையிலிருந்து தண்ணீர் ஓடுகிறதுபோல ஓடிக்கொண்டே யிருக்கிறது. நித்திரை, சோம்பல், பயம், கோபம், மயக்கம், தாமஸம் இவ்வாறையும் ஐசுவரியத்தை விரும்புகிறவன் நீக்கிவிடவேண்டும். வேதத்துக்கு வியாக்கியானம் செய்யத்தெரியாத குரு, படியாத குரு, காப்பாற்றச் சக்தியில்லாத அரசன், ஒவ்வாத விஷயங்களைப் பேசுகிற மனைவி, வெளியில் போக விரும்பாத இடையன், கிராமத்தைவிட்டுப் போகவிரும்புகிற அம்பட்டன் இவ்வறுவரும் கடலில் உடைந்துபோன கப்பலைப்போல விடத்தக்கவர்கள். சத்தியம், தர்மம், முயற்சி, உபகாரம், பொறுமை, சாந்தம் இந்த ஆறு குணங்களையும் மனிதன் ஒருபோதும் விடக்கூடாது. உத்தியோகம், பயிர், மனைவி, கல்வி, பசு, சூத்திரனுடைய செல்வம் இவ்வாறும் ஒரு க்ஷணம் அலட்சியம் செய்தாலும் உடனே அழியும். பின் சொல்லப்போகிற அறுவரும் தங்கள் உபகாரிகளை மறப்பார்கள். கற்றறிந்த சிஷ்யன் தன் குருவை மறந்துவிடுவான். விவாகம் செய்யப்பெற்றவன் தன் மாதாவை மறந்துவிடுவான். தன் எண்ணம் நிறைவேறப்பெற்றவன் ஸ்தி

ரீயை மறந்துவிடுவான். காரியசித்திபெற்றவன் தனக்கு உதவிசெய்த வரை மறப்பான். நதியைக் கடந்தவன் ஓடத்தை மறப்பான். வியாதி நீங் கப்பெற்றவன் தனக்கு வைத்தியம் செய்தவரை மறந்துவிடுவான் என் றறிக. சுகம், கடனில்லாமை, மனையிலே வசித்தல், நல்லவர்களுடைய சிநே கம், நிச்சயமான ஜீவனோபாயமுடைமை, அச்சமற்று வாழ்தல் இந்த ஆறும் எப்போதும் மனிதர்களுக்குச் சந்தோஷத்தைத் தருவனவாம். பகை யுடைமை, பொறாமை, அதிருப்தி, சீக்கிரம் கோபம் கொள்ளுதல், எப் போதும் சந்தேகம், பிறர்பொருளால் ஜீவித்தல் இந்த ஆறும் எப்போதும் துக்கத்தையேதரும். ஐசுவரியத்தைச் சேகரித்தல், தடைபடாத சுகம், இனிய வசனமும் அன்புமுள்ள மனைவி, வணக்கமுள்ள புத்திரன், இலாபம் பெறத்தக்க அறிவு இவ்வாறும் எப்போதும் மகிழ்ச்சியைத் தருவனவாம். காமம், கோபம், துக்கம், புத்திமயக்கம், கர்வம், அகங்காரம் இவ்வாறை யும் ஜயித்துப் புலன் அடங்கியிருக்கிறவன் ஒருபோதும் பாபத்தைச் செய்ய மாட்டான். ஆகையால் அவன் ஒருபோதும் துக்கத்தை அடைகிறதில்லை. ஜாக்கிரதையில்லாதவனாலே திருடன் ஜீவிக்கிறான். வியாதிக்காரர்களாலே வைத்தியர்கள் ஜீவிக்கிறார்கள். காமம் கொண்டவர்களாலே ஸ்திரீகள் ஜீவிக் கிறார்கள். யாகம் செய்கிறவர்களாலே குரு ஜீவிக்கிறார். சச்சரவு செய்கிற வர்களாலே அரசன் ஜீவிக்கிறான். படிப்பில்லாதவர்களாலே படித்தவர்கள் ஜீவிக்கிறார்கள். ஸ்திரீகள், சூதாட்டம், வேட்டை, குடி, கொடும்சொற் கூறல், கொடுந்தண்டனை, பொருளைக் கெட்டவழியில் உபயோகித்தல் இவ் வேழும் அரசனையும் அழிக்கும். ஆதலால் அரசனாயிருப்பவன் இவை துக் கத்தைத் தருவனவென்று அறிந்து இவைகளை விலக்கிவிடவேண்டும். உத் தம பிராமணரைப் பகைத்தல், அவர்கள் பொருளைக் கவர்தல், அவர்களுடன் சண்டையிடுதல், அப்பிராமணரைக் கொலைசெய்தல், அவர்களைத் தூஷிப் பது, பிராமணர் புகழைக் கேட்பதால் துக்கப்படுதல், சடங்குகள் செய்கையில் பிராமணர்களை மறப்பது, பிராமணர்கள் எதையாவது கேட்கும்போது அவர் களைப் பகைத்தல் இவ்வெட்டும் ஒருவனுடைய சீக்கிரமான அழிவைத் தெரி விப்பவைகளாம். சிநேகிதர்களைச் சந்தித்தல், திரண்டபொருளைச் சம்பா தித்தல், தன் புத்திரனைத் தழுவிக்கொள்ளுதல், பந்துக்களுடன் சேர்ந்திருத் தல், சரியானகாலத்தில் சிநேகிதர்களுடன் சம்பாஷித்தல், தன்னைச் சேர்ந்த வர்களால் மதிக்கப்படுதல், சபையில் மரியாதை பெறுதல், முன் எண்ணின தைப் பெறுதல் இவ்வெட்டும் சுகத்தின் சாரமாம். ஆகையால் இவைகள் அடையத்தக்கன. ஞானம், உயர்பிறப்பு, தன்னடக்கம், கல்வி, சாமர்த்தியம், மிதபாஷணம், சக்திக்குத் தக்கபடி கொடுத்தல், நன்றியறிவு இவ்வெட்டும் மனிதனுக்கு மகிமையை உண்டாக்குவனவாம்.

அரசனே! ஆத்ம சரீர சம்பந்தங்களை யறிந்த கல்விமான் உண்மை யாகவே ஞானியாவான். மதுபானத்தால் மயங்கினவன், கவனத் தாழ்ச்சி யுள்ளவன், துக்கப்படுகிறவன், களைத்தவன், கோபமுள்ளவன், பசித்திருக் கிறவன், அவசரப்படுகிறவன், பேராசையுள்ளவன், பயமடைந்திருக்கிறவன்,

காமி இந்தப் பத்துப்பேரும் தர்மத்தை அறியமாட்டார்கள். ஆகையால் புத்தியுள்ளவன் இந்தப் பத்துப்பேர்களுடனும் சேரக்கூடாது. இது பூர்வ காலத்தில் அசுரராஜனான பிரகலாதனுக்கும் சுதன்வாவுக்கும் நடந்த சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. சற்பாத்திரத்தில் தானம் கொடுப்பவனும், காமத்தையும் கோபத்தையும் விட்டவனும், பகுத்தறிவுள்ளவனும், படித்தவனும், சுறுசுறுப்புள்ளவனுமான அரசனை மனிதர்கள் எல்லாரும் பிரமாணமாக மதிக்கிறார்கள். பிறரை எப்படி நம்புகிறதென்பதையும், குற்றவாளியாகத் தீர்மானிக்கப்பட்டவனைத் தண்டனை செய்வதையும், எப்பொழுது இரக்கம் காட்டவேண்டுமென்பதையும் அறிந்த அரசன் பெருவாழ்வு பெறுவான். அற்பப்பகைவனைக்கூட அலட்சியம் பண்ணாதவனும், பகைவரிடத்தில் புத்திசாலித்தனமாய் நடந்துகொள்கிறவனும், ஆசையுடன் சமயத்தை எதிர்பார்த்திருக்கிறவனும், தன்னைக்காட்டிலும் பலமுள்ளவர்களிடத்தில் பகைகொள்ள விரும்பாதவனும், சமயம் வந்தபோது தன் பராக்கிரமத்தைக் காட்டுகிறவனும் புத்திசாலியென்று மதிக்கப்படுவான். துன்பமடைந்திருக்கிறபோது கலங்காமலிருக்கிறவனும், புத்தி ஒருமைப்பட்டு முயற்சிசெய்கிறவனும், துன்பம்வந்தபோது பொறுமையுடனிருக்கிறவனும், நிச்சயமாகவே மனிதர்களுக்குள் சிரேஷ்டமானவன். அவன் தன் சத்துருக்களைச் நிச்சயமாகவே ஜயிப்பான். வீணாக வீட்டை விட்டு வெளியில்போய் வசியாதவனும், பாபிகளுடன் சிநேகம் செய்யாதவனும், அகங்கார மில்லாதவனும், திருடாதவனும், நன்றி மறவாதவனும், குடிப்பதை விரும்பாதவனும் ஆகிய இவர்கள் எப்போதும் சந்தோஷமாயிருப்பார்கள். கேட்டபோது உண்மையைச் சொல்கிறவனும், சிநேகிதர்களின் நிமித்தமாகக்கூடச் சண்டையிடாதவனும், தான் தூஷிக்கப்பட்டபோதுகூடக் கோபமடையாதவனும், புத்திசாலியென்று கருதப்படுவான். பொறுமையின்றி எல்லாரிடத்திலும் பிரியமாயிருக்கிறவனும், பல மில்லாதவனுயிருக்கும்போது பிறருடன் வாதாடாதவனும், அகந்தையில்லாமல் பேசுகிறவனும், சண்டையில் மன்னிக்கிறவனும் எல்லாராலும் எவ்விடங்களிலும் புகழப்படுவான். குரூரத் தோற்றமில்லாதவனும், பிறர் புகழை வெறுத்துத் தன்னைப் புகழாதவனும், தன்னை மறந்து பிறரைக் கொடுஞ்சொல் கூறாதவனும், எல்லாராலும் நேசிக்கப்படுவான். பழம் பகையைப் பாராட்டாதவனும், அகந்தையும் அதிக வணக்கமுமில்லாமலிருப்பவனும், கஷ்டம்வந்தபோதுகூட அக்கிரமம் செய்யாமலிருப்பவனுமான ஒருவனைப் பெரியோர்கள் நல்ல நடக்கையுள்ளவனென்று மதிக்கிறார்கள். தன் வாழ்வில் மகிழாதவனும், பிறர் துன்பம் கண்டு களியாதவனும், தானம் கொடுத்தபின் வருந்தாதவனும், நல்ல நடக்கையுள்ளவனென்றும் நல்லகுண முள்ளவனென்றும் புகழப்படுவான். பல தேசங்களின் வழக்கங்களைத் தெரிந்துகொள்ள விரும்புகிறவனும், பலஜாதியாருடைய பாஷையைக் கற்கவிரும்புகிறவனும், பல ஜனங்களின் கொள்கைகளை உணர விரும்புகிறவனும், உயர்வு தாழ்வுகளை அறிகிறவனும் எவ்விடத்துக்குப் போனாலும் அங்கெல்லாம் நல்லோர்களாற் புகழப்படுவான். கெருவம், பொய், அகந்தை, பாபச்செய்கை, இராஜதுரோகம், மாறுபாடான நடக்கை, பலபேர்பகை, குடித்தல், பித்தன், துஷ்டன் இவர்களுடன் சண்டையிடுதல் இவைகளை விலக்கியிருக்கிறவன் தன் குலத்துக்குள் மேன்மைபெற்றிருப்பான். மனதை அடக்கப்பழகினவனும், பரிசுத்தனும், நல்லொழுக்கமுள்ளவனும், தேவாராதனை, பிராயச்சித்தம், பொதுவான கர்மானுஷ்டானம் இவைகளைத் தினந்தோறும் செய்துகொண்டு வருகிறவனும் ஆகிய இவர்களுக்குத் தேவர்கள் சகல வாழ்வுகளையும் கொடுப்பார்கள். கற்றறிந்த பெரியோரால் நன்றாய் ஆராயப்பட்ட செய்கையைச் செய்தல், நன்

ருய்ப் பரிசோதித்துத் தனக்குச் சரியானகுலத்தில் விவாகசம்பந்தம் செய்தல், தாழ்ந்தவர்களோடு சம்பந்தம் செய்யாமை, சற்பாத்திரமானவர்களைத் தன்னிடத்தில் வைத்திருப்பது, தனக்குச் சமானமானவர்களுடன் சம்பாஷித்தல், அவர்களுடன் பழகுதல், அவர்களுடன் சினேகிதம் செய்தல், இவைகள் தேவ கிருபைக்குப் பாத்திரமானவைகளாம். தன்னைச் சேர்ந்தவர்கள் எல்லாருக்கும் பகுத்துக் கொடுத்தபின் மிதமாய்ப் புசிப்பவன், அதிகமாக வேலை செய்தபின் கொஞ்சநேரம் தூங்குகிறவன், பகைவர்கள் கேட்டாலும் கொடுப்பவன், ஆத்மநியமன முள்ளவன், இவர்கள் ஒருபோதும் துக்கப்படமாட்டார்கள். யோசனையைப் பத்திரமாய்க் காப்பவன், ஒழுங்காய்ப் பழக்கத்துக்குக் கொண்டு வருகிறவன், தன் நடக்கைகளைக் கெட்ட மனிதர்கள் அறியாதபடி நடக்கிறவன், இவர்கள் எல்லாக் காரியங்களிலும் சித்தி பெறுவார்கள். பிராணிகளுடைய துன்பத்தை நீக்க விரும்புகிறவனும், உண்மையுள்ளவனும், பெருந்தன்மையுள்ளவனும், தர்மசாலியும், சுத்தமான எண்ணமுள்ளவனும் உயர்ந்த சுரங்கத்தினின்றும் எடுக்கப்பட்ட இரத்தினத்தைப்போலத் தன் சுற்றத்தார்க்கு நடுவில் பிரகாசிப்பான். தன் குற்றத்தைப் பிறர் அறியாமல் இருந்தாலும் அதைக்குறித்து நாணுகிறவனும் எல்லாருக்குள்ளும் சிறந்தவனாக மதிக்கப்படுவான். பரிசுத்தமான இருதயமுள்ளவனும், மிகுந்த சக்தியுள்ளனும், பகுத்தறிவுள்ளவனும் தன் காந்தியால் சூரியனைப்போலப் பிரகாசிப்பான். அரசனே! பாண்டுராஜன் பிராமணருடைய சாபத்தால் வனத்தில் இறந்தான். அவனுக்கு இந்திரனைப்போல ஐந்து புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களை நீர் வளர்த்துச் சகல கல்விகளையும் கற்பித்தீர். அவர்கள் உமது கட்டளைக்கு அடங்கி நடந்தார்கள். அவர்களுக்குக் கிடைக்க வேண்டிய பாதிராஜ்யத்தை அவர்களுக்குக் கொடுத்துவிடும். உமது புத்திரர்களுடன் நீர் சுகமாயிரும். மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் நம்பிக்கையும் நட்பும் ஏற்படும் என்று கூறினன்.

திருதராஷ்டிர மஹாராஜன் சொல்லுகிறூர்; ஏ குழந்தாய் விதுரா! எங்களுக்குள் நீ ஒருவன்தான் தர்மார்த்தங்களை உணர்ந்தவன். எனக்கும் அவர்களுக்கும் நன்மை புண்டாவதான விஷயத்தை நீ சொல் என்று கேட்டான்.

விதுரர்—அவமானத்தை விரும்பாமலிருக்கிறவன் ஒருவன் தன்னைக் கேளாமலிருக்கும்போது சொல்லக்கூடாது. கேட்டபின் தான் சொல்லப்போவது ஒருவனுக்கு வெறுக்கத்தக்கதாயிருந்தாலும், நல்லதாயிருந்தாலும், கெட்டதாயிருந்தாலும் உண்மையைச் சொல்லவேண்டும். இருவருக்கும் நன்மையானதையே சொல்கிறேன். நீதியில்லாததும், சரியில்லாததுமானதில் வெற்றியடைய மனதைச் செல்லவிடாதேயும்; சிறந்ததல்லாததும், ஒழுங்கற்றதுமான காரியங்களைச் செய்துவிட்டுச், சித்தியடையாமையால் அதைக் குறித்து வருத்தப்படக்கூடாது. ஒருகாரியத்தைச் செய்யத் தொடங்குவதற்கு முன்னலேயே செய்கிறவனுடைய சாமர்த்தியம். அந்தக் காரியத்தின் சுபாவம், அதைப்பற்றிய அபிப்பிராயம், அதன் பிரயோசனம் இவைகளை யோசித்துக்கொள்ளவேண்டும். ஏனென்றல் எல்லாக்காரியங்களும் இவைகளிலேயே நிலைபெறுகின்றன.

(தொடரும்) சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

சந்தாதாரர்களுக்கு:—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறேம். (ப-ர்.)

உ

சிவமயம்




## வாதவூரடிகள் ஞானோபதேசம் பெற்ற வரலாறு.

(99-ம் பக்கத் தொடர்ச்சி)

### அமைச்சு.

52. அறிவுடை மாந்தர் சில்லோ ரடுத்தன ரொருநா ளன்னார்
நெறிவா வுவப்பி னேற்று நிலவிய நந்நாட் டேனுங்
குறிகெழு பிறநாட் டேனுங் குலபதி சபமென் னென்றான்
செறிமலர்த் தொடையி னாயீ தென்றவர் செப்ப லுற்றார்.
(திருப்பெருந்-அமைச்சுரி. 9)

53. இந்தமா நகர்க்கடுத்த விரும்பொழில் வாத வூரி
லந்தமா தியினம் பெம்மா னருட்பெருந் திறத்தி னாலே
வந்தவா ருகுமாமாத் தியமறை யவர்கு லத்தின்
முந்தவா தரித்து தித்தா ரொருவரியா மொழிவ தென்னே.
(ஷை - ஷை 10)

54. அவர்பெயர் வாத வூர ரகவையீ ரெட்டுற் றார்மற்
றவரதி மதிநுட் பத்தைக் கல்வியை யளப்பா ரியாவ
ரவர்திற மூலக மூன்றும் வேட்பதா யமைந்த தைய
வவர்திற மொருநீ காணத் தக்கதென் றறைந்து போனார்.
(ஷை - ஷை 11.)

55. சான்றவர் வார்த்தை கேட்ட தார்த்தடம் புயக்கோ மாற
னான்றவ ரவரைக் காணு மதிவிருப் புடையனாகி
யேன்றவர் சிலரை விட்டா னெய்தியாங் கவர ழைப்ப
மான்றவர் கருதா வையர் வழுதிமு னடைந்தா ரன்றே. (ஷை - ஷை 12.)

56. இளங்கதி ருதய மேயென் றிசைதிரு மேனிப் பண்புங்
களங்கமின் மதியந் தோன்றிற் றெனுங்கவின் முகமுங் காம
ருளங்கெழு செய்ய வாயு மொள்ளிய கருணைக் கண்ணும்
வளங்கெழு மார்புந் தோளு மனங்களி பயப்பக் கண்டான்.
(ஷை - ஷை 13.)

57. மறைமுதற் கலைகளெல்லா மாண்புற வினாவுந் தோறுங்
குறைதவிர் விடைகொ டுக்கக் கொற்றவ னுவகை பூத்து
நிறையெது வினவி னாலு நிகழ்த்திடு மிவர்க்கின் றுதி
யறைகுதிர் பிரம ராய ரென்றமைச் சரைப்பார்த் தோதி. (ஷை - ஷை 14.)

58. பழுதற நமக்குக் கண்ணாய்க் கவசமாய்ப் பாதுகாக்கு
முழுதுண ரமைச்சி ருங்க டமக்கெலா முதன்மை யாகச்
செழுமறைப் பிரமராயர் தமைச்செய்தோஞ் செய்தோ மென்றான்
வழுதியவ் வமைச்ச ரெல்லா மகிழ்ந்தன மகிழ்ந்தோ மென்றார்.
(ஷை - ஷை 17.)

(தொடரும்)　　　　பஞ்சாட்சரபுரம், வாலையாநந்தம்.

# மூவர் தேவாரத் திருமுறைகளின் மகிமை.

## முகவுரை.

அன்பார்ந்த அறிஞர்களே!

உண்மை நாயன்மார்களாகிய மூவர் அருளிச்செய்த தேவாரத்திருமுறைகளின் மகிமைகளை இத்தன்மைத் தென்றறிந்து என்போன்றவர்கள் கூறிமுடிவதரிதென்பதை யான் உணர்வேன். ஆயினும் சென்ற ஆறுமாதகாலமாய் அத்திருமுறைகளை ஆதிமுதல் முறையே யான் ஓதிவந்தமையால் அவைகளின் மகிமைகளைக் கூறும் அவா எழுந்தது. ஈசன் திருவருள் அந்நாயன்மார்களிடம் நிரம்பியிருத்தலின் அவர்கள் திருவருளை துணையாக்கொண்டு என் சிற்றறிவிற் கெட்டியவளவே ஒருசிறிது கூறலுற்றேன். இதில் யாதேனும் குற்றங்களிருப்பின் பெரியோர்களை மன்னிக்குமாறு வேண்டிக்கொள்கிறேன்.

## தேவாரம் என்றல் என்ன?

தே+ஆரம்=தேவாரம் என்றும், தேவு+ஆரம்=தேவாரம் என்றும் தேவாரமென்ற தொடர் பிரியும். தே ஓரெழுத்தொரு மொழிப்பதம். தேவு: தேவன் என்ற பதத்தின் சிதைவு; தே தேவு என்பன தெய்வம் தேவன் என்ற பொருளையும் ஏனைய பொருளையுந்தரும். தெய்வம் முழுமுதற் கடவுளாகிய பரசிவம். சிவமென்றால் நித்தியமங்களம் என்று பொருள். பரசிவம் சித்தமாய் அகண்டமாய் சர்வ வியாபகமாய் உயிர்க்குயிராய் உண்மையறிவானந்த வுருவாய் பூ, பூவின் நிறம், பூவின் மணம்போல எங்கும் நீக்கமற விளங்குவதென வேதாகமங்கள் மொழியும். அவ்விதம் எங்கும் நீக்கமின்றிப் பாலில் நெய்போல் தோன்றாது விளங்கினும் பரங்கருணைத் தடங்கடலாய அருளே திருமேனியாய் ஆன்மாக்கள் வழிபட்டுய்யும் பொருட்டு திருவாலயங்களினிடத்தும் சிவனடியார்களினிடத்தும் தயிரில் நெய்போல் தோன்றி விளங்கும். ஆனதுபற்றியே "ஆலயந் தொழுவது சாலவும் நன்று" என்றார் முதுஞானப் பழமாகிய ஔவைப் பிராட்டியார். ஆலயந் தொழுவது நன்றென்று மாத்திரங் கூறாது சாலவும் அதாவது மிகவும் நன்றென்று வற்புறுத்திக் கூறியது ஆலயந் தொழுவதால் பாவங்களினீங்கி இகத்தில் நன்மையெலாம் எய்தப்பெற்று பரத்தில் அழிவற்ற முத்தியும் அடையலாம் என்பது பற்றியாம். ஆரம்=மாலை, கோட்டுப் பூ கொடிப்பூவாதிய மலர்களால் பலவித மாலைகளைக்கட்டி ஈசன்திருமேனியிற் சாத்துவதுபோல் பெயர்ச்சொல் வினைச்சொல்லாதிய சொற்களால் பலவித சொன்மாலைகளையியற்றி மெய்யடியார்களால் சாத்தப்படுவது. ஈசனுக்கு மலர்மாலையினும் சொன்மாலையிற் பிரீதியதிகமாம். இதற்குப் "பன்மாலைத் திரளிருக்கத் தமையுணர்ந்தோர் பாமாலைக்கே நீதான் பக்ஷமென்று, நன்மாலையா வெடுத்துச் சொன்னார் நல்லோர்" என்ற தாயுமானார் கூற்றே சாலும்.

## 2. தேவாரத் திருமுறைகளை இயற்றியவர்கள்.

தேவாரத் திருமுறைகளை இயற்றியவர்கள் ஆளுடையபிள்ளையார், ஆளுடைய வரசு, ஆளுடைய நம்பி—முறையே திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் திருவாரூரரெனும் சுந்தரர் ஆகிய மூவருமாவர். இம்மூவர்களில் சம்பந்தர் சுந்தரர் என்னுமிருவரும் அந்தணரும் திருநாவுக்கரசரெனும் அப்பர் வேளாளருமாவர். சம்பந்தரை மூன்று வயதில் சிவபெருமான் இடபவாகனரூடராய்க் காட்சியளித்து ஞானப்பால் கொடுத்தாண்டருளினர். அப்பரை முன்சமண்சமயத்து தருமசேனரென்று பெயருற்றிருக்குங்கால் அவருக்குச் சூலைநோய் கொடுத்து அது தீராது வருந்தியிருக்கும்போது அவர் தமக்கையார் திலகவதியாரெனும் உத்தமியாரால் ஸ்ரீபஞ்சாக்ஷரம் ஓதிய விபூதியளிப்பித்து முதலிற் சூலை நோய் தீரப்பதிகம் ஓதச்செய்வித்து ஆண்டருளினர். சுந்தரரை அவர் கலியாணகாலத்தில் இவன் தம்மடியான் என்று கூறி வந்து தடுத்தாட்கொண்டனர். மூவர்களில் சம்பந்தரும் அப்பரும் சமகாலத்தவர்; சுந்தரர் காலத்தால் பிற்பட்டவராவர். இம்மூவர்களின் வயது

“ அப்பருக்கெண் பத்தொன் றருள்வாத வூரருக்குச்
செப்பியநா லெட்டினிற் றெய்வீகம்—இப்புவியிற்
சுந்தரர்க்கு மூவாறு தொல்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி”

என்ற வெண்பாவினால் அறியத்தகும்.

3. மூவர் தேவாரங்களை மூன்று பெயரால் மூதறிஞர் மொழிவர். மூவர்களருளிச்செய்த தேவாரங்கள் அருட்பா வென்றும், அடங்கன் முறையென்றும், தமிழ்மறை யென்றும் ஆன்றோர்களால் கூறப்பெற்று வழங்கி வருவதை ஆராய்வோம். மெய்யடியார்களும், கணவனைத் தெய்வமாகத்தொழுது அவன் பணிபுரியும் உத்தமக் கற்புடையாரும் அன்பினால் ஒப்பாவர். மனைவி நாயகன் நாமத்தைக் கேட்டபொழுது தன்வசமிழந்து உடல் புளகங்கொண்டு உள்ளம் நெகிழ்வள்; அவனைக் கண்டு அவனுக்குப் பணியியற்றும்போது மனமுருகி அவனோடொன்றித்து இருவருயிரும் ஒன்றாகி விளங்குவர். அதுபோல் மெய்யடியார்களும் தமதிறைவன் திருநாமத்தைக் கேட்டபோது உரோமாஞ்சிதர்களாய் உடல் புளகித்து மனம் நெகிழ்வர். ஈசன்றிருமுன் சென்று அவனைத் தரிசித்து வணங்கும்போது திருவுருவத்தை உள்ளத்துட்கொண்டு நினைந்துருகித் தம் வசமிழந்து அவனோடொன்றி ஐக்கியமாகிறார்கள். இத்தகைய மெய்யன்பர்களில் தலைசிறந்தவர்களாய் நமது சைவசமயாசாரியர்களாய் ஆலயங்களில் நாம் வழிபடு முறைகளைக் கற்பித்த வழிகாட்டிகளாய் விளங்கிய இம்மூவர்களின் அன்பின் பெருக்கும் ஈசனருளின் பெருக்கும் அன்பு அருள் இன்னதென்றறியாத என்போலிகள் கூறுந்தரமன்றென்று முகவுரையிலுங் கூறியுள்ளேன். இந்நாயன்மார்கள் புண்ணிய பூமியெனப்படும் நம் பரதகண்டத்துள்ள (274) சிவாலயங்களில் ஆயிரக்கணக்கான அடியார் குழுவோ டெழுந்தருளித் திருக்கோபுரங்களைக் கண்டபொழுதே புவியில் விழுந்து வணங்கி இருகர மலர்கள் சிரங்குவியத் திருவாலயத்துள் வலம்வந்து, கற்றாவி னுள்ளம் போற் கசிந்து எம்பெருமான்றிருவடித் தாமரைகளில் வீழ்ந்து அட்டாங்கமாகி வணக்கம் புரிந்தெழுந்து சிவபரம்பொருளைத் தமதுள்ளத்திற்கொண்டு அழலிடைப்பட்ட மெழுகுபோல் என்புருக வுருகி வுருகி நினைந்து நினைந்து இருகணீர்பெருகியோடத் தற்போதமகன்று அதாவது நான் எனது என்ற அபிமானச் செயல் நீங்கிச் சிவானந்தப் பெருவாரியிற் றேக்கித்திளைத்து சிவனருள் உள்ளே பெருகிப்பொங்கி வடிந்தாற்

போல் இம் மூவர்களின் திருவாய்களினின்றும் வந்த அருட்பாக்களானமையால் திருவருட்பா எனவும், வேதங்களிற் கூறும் எழுகோடி மந்திரங்களையும் திரட்டி எழுமுறைகளால் கூறியிருப்பது கொண்டு அடங்கன் முறை யென்றும், வேதங்கள் கன்மம்பத்தி ஞானம் என மூன்று காண்டங்கள் உடையனவாகி அளவிலாச் சாகைகளோடு ஆன்மாக்களுக்குத் தர்மார்த்தம் முதலிய புருடார்த்தங்களை யடையச் செய்விப்பனவாய் உண்மைப் பரம்பொருளின் இலக்கணங்களையும் அதனையடையச் செய்யும் வழிகளையும் விளக்கும் பிரமாணங்களாயிருப்பதுபோல் தேவாரத் திருமுறைகளிலும் தூலரூபமாகவும் தத்துவவடிவ சூக்குமரூபமாகவும் அப்பொருள்களைப் பிரதிவாதித்து ஒதியிருப்பது கொண்டு தமிழ்வேத மெனவும் ஆன்றோர்களால் மொழியப் பெற்று வழங்கி வருகிறது. இதற்குப் பிரமாணம்

"தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்"

என்ற ஆன்றோர் கூற்றேயாம்.

எம். சிதம்பரகுற்றலம் பிள்ளை.

## நாட்டு மொழிகட்கு நற்காலம் எப்போது?

"ஆங்கிலமொழியை அடியோடு தொலைக்கவேண்டுமென்று நாம் விரும்பவில்லை. தற்கால நிலைமைக்கேற்ப மத்தியதரக் கல்வி பயிலும் மாணவர்க்குச் சரியான அறிவு நிரம்புமாறு கொஞ்சக்காலமாவது அது கட்டாய பாடமாக இருக்கவேண்டும். இக்கால உலகியல் விவகாரங்கட்கு ஆங்கிலப்பயிற்சி இன்றியமையாதது. இதேசமயத்தில் நாட்டு மொழிகள் செழுமை பெற்றோங்கத் தீவிரமுயற்சி விரைந்து செய்து அவைகட்குப் புத்துயி ரளிக்கவேண்டும். இந்தியாவிலுள்ள ஒவ்வொரு சர்வகலாசாலையும் அவ்வம்மாகாணமொழியை வளர்க்க ஏற்பாடு செய்யவேண்டும். உதாரணமாக வங்க சர்வகலாசாலையார், வங்காளிகள், வங்காளிக ளல்லாத இந்தியர், ஆங்கிலோ இந்தியர், ஐரோப்பியர் ஆகிய எல்லா வித்தியார்த்திகட்கும் வங்கமொழியில் ஒரு பரீக்ஷை நடத்தவேண்டும். வேறு நாட்டிலிருந்து ஆராய்ச்சிக்காக வந்திருப்பவர்கள் தவிர அம்மாகாணவாசிகட்கும், அங்கு வழக்கமாகக் குடியேறி யிருப்பவர்கட்கும் இவ்விதி இருக்கவேண்டும்" இது அறிஞர் கோபால் ஹால்டார் ஒருபத்திரிகையில் வெளியிட்ட அரிய யோசனையாகும். நமது சென்னைப் பல்கலைக் கழகத்தாருக்கு இதை அப்படியே சமர்ப்பணம் செய்கிறோம்.




## வேதாந்த சார சங்கிரக வசனம்.

(80-ம் பக்கத் தொடர்ச்சி.)

### பிரம்மாண்ட சிருஷ்டி.

ஈசுவரனது சங்கற்பத்தினால் பஞ்சீகரணம் செய்யப்பட்ட ஆகாயம் முதலிய ஸ்தூல பூதங்களால் சராசரவடிவமான இப்பிரபஞ்ச முண்டாயிற்று. இப்பிரபஞ்சத்தி லமைந்துள்ள நான்குவகைப்பட்ட எல்லா ஜீவராசிகளுக்கும் தானியாதிகளும், காற்று, தீ, ஜலம், மண் என்பவைகளும் உணவுப் பொருள்களாகச் சமைந்தன.

சீடன்:—குருநாதா! நான்குவகைப்பட்ட ஜீவராசிக ளெவை?

குரு:—ஜந்துக்கள் தத்தம் கர்மானுசாரமாக ஜராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உற்பிஜ்ஜம் என நால்வகைப் பிறவிகளை யெய்தும். அவற்றில்,

(1) ஜராயுஜம்—கருப்பையினின்றுந் தோன்றும் மனிதரும், மிருகம் முதலானவைகளும் ஜராயுஜமாம்.

(2) அண்டஜம்—முட்டையினின்றும் தோன்றும் பறவை பாம்பாதி அண்டஜமாம்.

(3) சுவேதஜம்—வியர்வை முதலிய அழுக்கினின்றுந் தோன்றும் பேன் முதலாயின சுவேதஜமாம்.

(4) உற்பிஜ்ஜம்—பூமியைப் பிளந்துகொண்டு வெளிவரும் செடி கொடி புல் பூண்டு முதலியன உற்பிஜ்ஜமாம்.

சீடன்:—இவற்றிற்குத் தானிய தவசங்கள் உணவென்றது சரியே. காற்று, தீ முதலியவைகள் உணவென்றீர்களே! அது எப்படி?

குரு:—சில பிராணிகள் காற்றைப் புசிக்கும்; சில சூரிய சந்திரர்களின் கிரணங்களைப் புசிக்கும்; வேறு சில நீர்த்துளிகளைப் பானம் பண்ணும். மற்றுஞ் சில மண்ணைத் தின்னும்; சில மாமிசத்தைப் பக்ஷிக்கும்; சில தானியங்களைப் புசிக்கும்; சில புல்லாதி யவற்றைப் புசிக்கும்.

### விராட்டு விசுவர்கள்.

ஞானபுத்திரா! இந்த நால்வகைப்பட்ட பிராணிகளின் சம்பந்தமான இத்தூல சரீரங்களின் சமுதாயம் (கூட்டம்) சமானமா யிருத்தலால் 'ஒன்று' என்னும் புத்திக்கு விஷயமாவதால் சமஷ்டியாகும். இந்த சகலஸ்தூல சரீர சமஷ்டியோடு கூடின சைதன்யம் வைசுவானரனெனவும் விராட்டெனவு மழைக்கப்படுகின்றது. எல்லா ஜந்துக்களையும் தன் சரீரமாக அபிமானத்திருப்பதால் வைசுவானரன் என்பதும், தானே பலவிதமாகப் பிரகாசித்தலால் விராட்டென்பதும் பெயராம்.

மேலும், நால்வகையான ஜீவகோடிகளும் அந்தந்த ஜாதிபேதங்களால் அநேகமாகிய புத்திக்கு விஷயமாவதால், முற்கூறிய வனவிருட்ச திருஷ்

டாந்தத்தின்படி வியஷ்டி யெனப்படுகிறது. சிதாபாசனோடு (பிரமச்சாயை) கூடிய வியஷ்டி ஸ்தூல சரீரத்தோடு கூடியதும் அச்சரீரத்தோடு தாதாம்ய (சம்பந்த) முடையதுமாகிய சைதன்யம் விசுவன் என்றழைக்கப் படுகிறது. வியஷ்டிஸ்தூல சரீராபிமானி விசுவனும்.

(எல்லாச் சரீரங்களையும் தன் சரீரமென்றபிமானிக்கும் ஈசுவரன் வைசுவானரனெனவும் விராட்டெனவும் அழைக்கப்படுகிறான். வியஷ்டியாகிய ஒரு சரீரத்தைத் தனதென்றபிமானிக்கும் ஜீவன் விசுவனெனப்படுகிறான்.)

## அன்னமய கோசம்.

இந்த விசுவனுடைய வியஷ்டிஸ்தூல சரீரமானது அன்னவிகாரமானதாகலின் அன்னமய கோசமாம். எவ்வாறெனில்; இச்சரீரமானது மாதா பிதாக்களுண்ட அன்னத்தின் விகாரமாகிய சுக்கில சோணிதங்களாலுண்டாவது. அன்னத்தால் வளர்வது; அன்னமில்லாவிடின் நசித்துப் போவது. ஆகலின் இது அன்னமயமாம். மேலும், இச்சரீரம் உறையானது கத்தியை மூடிக்கொண்டிருத்தல்போல் ஆத்மாவை மறைத்துக் கொண்டிருத்தலால் கோசமெனப்படுகிறது. இக்காரணங்களால் இத்தூல சரீரம் அன்னமய கோசமாம்.

இவ்வன்னமய கோசமாகிய சரீரம் ஆத்மாவின் ஸ்தூல போகங்களுக்கிருப்பிடமாயிருப்பதாம். ஆத்மா இந்தத் தூல சரீரத்தி லிருந்துகொண்டு வெளியில் ஸ்தூலமாகவுள்ள சப்தாதி விஷயங்களை யனுபவிக்கின்றது. அதனால் இது ஸ்தூல போக ஸ்தானமாம். ஆதலால் இந்த ஆத்மா தேகத்துடனும் இந்திரியங்களுடனும் மனத்துடனும் கூடினதாய் இந்திரியங்களால் கிரகிக்கப்படும் சப்தாதி விஷயங்களை அனுபவிக்கின்றதெனக் கற்றறிந்த பண்டிதர்கள் கூறுவார்கள்.

பல ஊழியர் குற்றேவல்புரியுமாறு சிங்காசனத்தமர்ந்துள்ள ஓர் அரசன் போல், ஆத்மாவும் இந்திரியங்களாகிய சேவகரால் சேவிக்கப்படுகிறவனாய் நவத்துவாரங்களையுடைய இச்சரீரத்தி லிருந்துகொண்டு விஷயபோகங்களை யனுபவிக்கின்றான். மனம் முதலாகிய ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் தத்தமக்குரிய அதிதேவதைகளால் பிரேரேபிக்கப்பட்டுத் தத்தம் தொழில்களைச் செய்யச் சித்தமாய்க் கிங்கரர்களைப்போல பிரயத்தனத்தால் ஆத்மாவாகிய அரசனைச் சேவித்துக் கொண்டிருக்கும்.

பேரறிவுடைய ஆத்மா எந்த அவஸ்தை (நிலைமை) யில் நான் எனது என்று ஸ்தூலமாக விஷயங்களை அனுபவிக்கின்றானோ அந்த அவஸ்தை ஜாக்கிராவத்தை யெனப்படும்.

முன்னர், வியஷ்டி ஸ்தூல சரீரத்திற்கும் சமஷ்டி ஸ்தூல சரீரத்திற்கும் விருட்சத்திற்கும் வனத்திற்கும் போல அபேதமென அங்கீகரிக்கப்பட்டபடி, வியஷ்டி ஸ்தூல சரீராபிமானியாகிய விசுவனுக்கும் சமஷ்டி ஸ்தூல சரீராபிமானியாகிய வைசுவானரனுக்கும் பேதமில்லை யென்பது ஈண்டறியத்தக்கதாம்.

இதுகாறும் ஸ்தூலம் சூட்சுமம் காரணம் என்னும் மூன்றுவித பிரபஞ்சம் நிரூபிக்கப்பட்டன. ஆயினும் இம்மூன்றும் சேர்ந்து ஒரே மகாப்பிரபஞ்சமாகும். இந்த மகாப் பிரபஞ்சத்தோடு கூடினதும், விசுவன் பிராஞ்ஞன் முதலான லக்ஷணங்களை யுடையதும், விராட்டுமுதல் ஈசுவரன் வரைக்குமுள்ளதுமாகிய சைதன்யமெல்லாம் ஒன்றேயாகும். ஆகையால் இச்சகல

பிரபஞ்சமும் பிரஹ்மமேயாகும். கொல்லனது உலைக்களத்தில் செக்கச்செவே ரெனக் காய்ச்சப்பட்ட இரும்புருண்டையினிடத்து நெருப்பெங்ஙனம் சேர்ந்திருக்கின்றதோ அங்ஙனமே பிரபஞ்சம் முழுதும் பிரஹ்மம் சேர்ந்திருக் கின்றது. ஆகையால் "சர்வம் கல்பிதம் பிரஹ்மம்" (பிரபஞ்சம் பொய்; பிரஹ்மமே சத்யம்.) என்னும் சுருதிவாக்கியத்திற்கு இப்பிரபஞ்சத்துடன் கூடியுள்ள பிரஹ்மசைதன்யம் வாச்சியார்த்தமும், பிரபஞ்சத்துடன்கூடாத பிரபஞ்சாஹித பிரஹ்மசைதன்யம் லட்சியார்த்தமுமா மென்றறிக.

அறிவுள்ள குமாரா! ஜாக்கிராவத்தையில் தூலவஸ்து காணப்படுகின்றது. சொப்பனவஸ்தையில் சூக்குமம் காணப்படுகின்றது. சுழுத்தியில் அஞ்ஞானம் காணப்படுகின்றது. (இதனால் ஸ்தூல சூக்கும காரணமென்னும் இம் மூன்றும் ஒருகாலத்துள்ளது மற்றொருகாலத் தில்லாததாய் பிறழ்ச்சியுடையதாயிருத்தலின் பொய்யென்றும், இம் மூன்று அவஸ்தைகளையும் அறிந்து கொண்டிருக்கும் சாட்சியாகிய ஆத்மவடிவ பிரஹ்ம மொன்றே சத்தெனவும் (முக்காலத்துமழியாதிருப்பதெனவும்) அறிக, "சர்வம் கல்பிதம் பிரஹ்மம்" என்னும் வேதவாக்கியத்தின் பொருள் இதனால் அறியக்கிடப்பதும் காண்க.) அன்றியும், பிரபஞ்சமும் பிரஹ்மமும், குடமும் மண்ணும் போலக் காரிய காரண வடிவமாகக் காணப்படுபவையாம். இப்படி ஸ்தூல பதார்த்தம் முதல் அஞ்ஞானம் வரையிலுமுள்ள காரிய காரணத்தன்மையினையுடைய திருசிய (பார்க்கப்படுபவை) மனைத்தும் அநாத்மாவென்றறிக.

## ஆத்ம நிரூபணம்.

சீடன்:—சுவாமி! திருசியப் பொருள்களெல்லாம் ஆத்மாவன்றேல், ஆத்மா வென்னப்படுவதுதா னெது?

குரு:—உத்தம சீடனே! அந்தக்கரணத்திற்கும், அவ்வந்தக்கரண விருத்திகளுக்கும் சாக்ஷியாயும், நித்தியமாயும், நிர்விகாரமாயுமுள்ள சைதன்யமே ஆத்மாவா மென்பதை நீ உன் சூட்சுமபுத்தியா லறியக்கடவாய்.

சீடன்:—ஆத்ம லக்ஷணங்களெவை?

குரு:—அந்த ஆத்மா தனக்குத்தானே சுயம்பிரகாசமாக விளங்குவது; அவயவ மற்றது; நிர்மலமானது; எப்பொழுதும் ஒரே தன்மையாயிருப்பது; பூரணானந்த வடிவாகவுள்ளது, சங்கற்பமற்றது, சாட்சி மாத்திரமா யிருப்பது; சித்வடிவினது; இரண்டாவதற்றது, நிர்க்குணமாயுள்ளது; அந்த ஆத்மா பிறப்பதன்று; வளர்வதன்று; குறைவுபடுவதன்று; அழிந்து போவதன்று. அந்த ஆத்மா சத்திய சொரூபமானது. எக்காலத்துமுள்ளது; புராதனமானது. மேலும் சரீரம் வதைக்கப்படினும் அது வதைபடாதது.

தோன்றுதல், இருத்தல், வளர்தல், மாறுபடுதல், குறைதல், நசித்தல் என்னும் இவ்வாறு விவகாரங்களும் திருசிய பதார்த்தங்களுக்கே யுளவாம். ஆதலால் இந்த ஷட்பாவ விகாரங்களும், பலவகைப்பட்ட வியாதிகளும் தூலத்தன்மை முதலியனவும், நீலத்தன்மை முதலாகிய குணங்களும், அளவும், வருணம் ஆஸ்ரமம் முதலிய வியவகாரங்களும் சரீரத்திற்கே உளவாமன்றி, சரீரவிகாரங்களுக் கெல்லாம் சாட்சியாகவுள்ள ஆத்மாவிற்கின்றாம். இதை யறியாத மூடர் அஞ்ஞானத்தால் இந்த ஆத்மாவின் தன்மையை அநாத் மாவினிடத்தும் அநாத்மாவின் தன்மையை ஆத்மாவினிடத்தும் கற்பித்து ஜனன மரணப்பிரவாக ரூபமாகிய சம்சாரத்தில் விழுகின்றார்கள். சத்திய

ஞான ஆனந்த லக்ஷணமுடையது ஆத்மா. அசத்து, ஜட துக்க லக்ஷண முடையது அநாத்மா. இந்த ஆத்மாவின் தர்மங்களாகிய சத்தியஞானனந் தங்கள் சரீரமாகிய அநாத்மாவின் தர்மங்களென்றும், அநாத்மாவின் தர்மங்க ளாகிய அநிருத ஜட துக்கங்கள் ஆத்மாவின் தர்மங்களென்று மாறுபாடாக அறிதலே அஞ்ஞானமாம். இதனை விபரீத வுணர்வென்கின்றனர் திருக்குறள் உரையாசிரியர் பரிமேலழகர். இவ்வஞ்ஞானமே பிறவிக்குக் காரணமாம். இதனை,

"பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு."

எனத் திருவள்ளுவரும், இதனுரையில் சுத்தியை மகனென்றும் இப்பியை வெள்ளியென்றும் இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்ருகத் துணிதலும் அது (மருள்-விபரீதவுணர்வு) எனப் பரிமேலழகரும் கூறுவதனானு முணர்க. இம் மருளாகிய விபரீத வுணர்வை (அஞ்ஞானத்தை) விட்டு, பொய்ப்பொருளைப் பொய்ப்பொருளாகவும் மெய்ப்பொருளை மெய்ப்பொருளாகவுங் காண்டலே மெய்யுணர்தலாம். இதுவே தத்துவஞான மெனப்படும். இதனிலக் கணத்தை பொய்யில் புலவர்,

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப் பொருள் காண்ப தறிவு."

என்னும் குறளால் விளக்கியுள்ளார். இதன் பொருளை "பொருள் தோறும் உலகத்தார் கற்பித்துக் கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து, நின்றவுண்மையைக் காண்பதே அறிவாம். அஃதாவது, கோச்சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை என்றவழி, அரசனென்ப தோர் சாதியும், சேரமானென்பதொரு குடியும், வெழநோக்கினை யுடையா னென்பதோர் வடிவும், சேய் என்பதோ ரியற்பெயரும், மாந்தரஞ்சேர லிரும்பொறை யென்பதோர் சிறப்புப் பெயரும், ஒரு பொருளின்கண் கற்பனையாகலின், அவ்வாறுணராது நில முதல் உயிரீருகிய தத்துவங்களின் ரொகுதியென வுணர்ந்து, அவற்றை நிலமுதலாகத் தத்தங் காரணங்களு ளொடுக்கிக்கொண்டு சென்ருல் காரண காரியங்களிரண்டு மின்றி முடிவாய் நிற்பதனை யுணர்தலாம். இயங்குதிணையும் நிலைத்திணையுமாகிய பொருள்க ளெல்லாம் இவ்வாறே யுணரப்படும். இதனால் மெய்யுணர்வின இலக்கணங் கூறப்பட்டது" எனப் பரிமேலழகர் கூறியுள்ளார்.

"கற்று ஈண்டு மெய்ப் பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி."

என்றபடி மெய்ஞ்ஞானத்தால் பிறவி நீங்கும் என்னுநிலை ஈண்டறியத் தக்கனவாம்.

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாஸன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## நமது அநுதாபம்.

நமது ஜீவிய சந்தாதாரர் திருவாளர் - சர். அம்பலவாணர் கனகசபை Kt. B. A. அவர்கள் காலஞ்சென்றமை கேட்டு மிக வருந்துகிறோம். அவர் பிரிவால் வருந்தும் அவருடைய குடும்பத்தாருக்கு எமது அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அவருடைய ஆன்மா சாந்தியடைவதாக,

# ஆனந்த சந்திரோதயம்.

"துணைக்கரங் கூப்பிக் கேண்மின் துகில்தனைத்தருவன்" கோபிகா ஸ்திரீகள் யமுனையில், தத்தம் ஆடைகளைக்களைந்து கரையில் வைத்துவிட்டு நிருவாணமாக ஜலக்கிரீடையாடலாயினர். அதுகாலை கோபிகாலோலனாகிய கிருஷ்ணபரமாத்மா ஆங்குற்று, அக்கோபியர்களின் ஆடைகளைக் கவர்ந்து கொண்டு, ஆங்கிருந்த புன்னைமரத்தின் மீதேறிக்கொண்டதைக் கவனியாது நீர் விளையாடிய பெண்கள், ஜலக்கிரீடை முடிந்தபின் தத்தம் ஆடைகளைத் தேடிக் கரைக்கருகே வந்து, காணாராகி, மருண்டு அங்குமிங்கும் பார்த்து, அச்சீரைகளுடன் புன்னைமரத்தின்மீதமர்ந்து வேணுகானஞ் செய்யுங் கண்ண பிரானைக் கண்டு, தமது ஆடையைத்தருமாறு வேண்ட, நிருவாணமாயிருக்கின்ற அக்கோபிகைகளைப்பார்த்துக் கண்ணன் 'துணைக்கரங் கூப்பிக் கேண்மின் துகில்தனைத்தருவன்' என்றார். இச்சம்பவத்தின் அந்தரார்த்தத்தை அறிகிலாதார் பலர் 'இதுவுங் கடவுள் செய்கையாமா? இவ்வாறு நடந்து கொண்டவரை நாம் கடவுளென்று எங்ஙனம் கூறலாம்? என்று கேலிசெய்து, தூஷணைகளைக் கிளப்புகின்றனர். இதன் உள்ளுறை வேறு: கோபிகைகள் ஜீவான்மாக்கள்: புன்னைமரம் பரமபதம்; ஆடைகள் பாசபந்தம். இந்த பாசங்களை ஸ்ரீ கிருஷ்ணபகவான் கவர்ந்து, 'சாயுஜ்ய பதவியையடைய வாருங்கள்' என்றழைப்பதாகிய வேணுகானஞ் செய்தார். கோபிகா ஸ்திரீகளான ஜீவான்மாக்கள் கண்ணனைநோக்கி இரந்தனர். அப்பொழுது அவர், 'நீங்கள் ஒருகையால் மானத்தைக் காப்பாற்ற முயலுகின்றீர்கள்; அது ஆகாது. இத்தேகாபிமானத்தை விட்டாற்றான் மோக்ஷம் பிராப்தியாகும்; ஆதலின், உடலைப்பொறுத்த அபிமானத்தைவிட்டு, என்னையே முற்றிலும் நம்பி இரு கரங்களையும் கூப்பிக்கேளுங்கள்' என்றுபதேசித்தார். இதுதான் அதன் உட்கருத்தாகும். எப்படி ஒரு குயவன் தான் செய்த மண் பதுமைகளைப் பார்த்து மோகங்கொள்வதில்லையோ அதுபோன்றே ஜெகத்காரணரான ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா தாம் படைத்த இந்தக் கேவல மனிதசரீரத்தைக்கண்டு காதல் கொண்டாரென்பதில்லையாகும். இதனால் சரீராபிமான முள்ளவரை ஆன்மாவுக்கு முக்தி ஏற்படாதென்பது விளக்கமாம்.

*  *  *  *

"நீண்டானே! கரியானே! நிமலா!" என்று துரௌபதி துரியோதனன் அவையில் தனது துகில் அபகரிக்கப்பட்டபோது அரற்றினாள்; சோர்ந்தாள். அதற்குமுன் துரியோதனன் துகிலுரியத் தொடங்கியபோழ்து, முதலில் தனதிருகரங்களாலும், பிறகு ஒரு கையாலும் தனது அரையாடையைப்பற்றிக்கொண்டு தபித்தாள். அப்பொழுது அவளுக்குச் சிறிது தேகாபிமான மிருந்தது; அவள் முற்றிலும் பகவானை ஸ்மரிக்கவில்லை. அப்பொழுது பகவானும் ஆங்கு வரவில்லை. அவளது அரையாடை அநேகமாக அபகரிக்

கப்பட்டுத் தனக்கு மானபங்கமேற்பட்டுவிடுமென்று அவள் மனமுறியும் அத்தருணத்தில் இரண்டு கைகளையும் ஆடையை அணைப்பதினின்று மெடுத்துக் கூப்பி "ஹா! கிருஷ்ணா! துவாரகாவாஸா!" என்று பதைபதைத்து அலறினள். அக்கணமே அப்பன் அங்கு வந்துதவினார்; "துரௌபதி! 'ஹா கிருஷ்ணா துவாரகா வாஸா' என்று அழைத்தமையால் நான் துவாரகையி லிருந்துவர இக்கோமாயிற்று. 'ஹா கிருஷ்ண ஹிருதய கமல வாஸா!' என் றழைத்திருக்கக்கூடாதா?" என்று வினவினார். ஆகா! என்ன விநயம்! தேகாபிமானத்தை முற்றிலும் விட்டு, பகவானையே பரிபூரணமாய் நம்பி, அவனையன்றி வேறு துணையில்லையென்று அனவரதம் பக்திசெய்திருப் பார்க்கு, அவர்களைப் பலவிதத்திலும் சோதித்தாலும் சமயத்தில் அவர்களை இறைவன் கைவிடாது காக்கின்றார்.

*　　　*　　　*　　　*

"ஒரு கையால் வந்தனம்" செய்வதாகாதென்பது ஆன்றோர்கொள்கை. 'சலாம்! குட் மார்னிங்' என்ற மதத்தினர் 'எண்சாண் உடம்பிற்குச் சிரசே பிரதானம்' என்றவாறு அவ்விதம் செய்கின்றனர். நாம் நமஸ்காரம் செய் கிறோம். அதாவது, உமது ஹிருதயகமலத்தில் நிவசிக்கும் பரமாத்மாவை நான் நமஸ்கரிக்கின்றேன்; எனது மார்பிலும் அவன் நிலைகொண்டுளான்' என்னும் தத்துவத்தை நாம் அடிக்கடி உணருவதற்கு இவ்வனுஷ்டானம் ஏற்பட்டதாகும். நமது ஆசாரத்தைவிட்டு, பிற மதத்தினர் கொள்கையை நாம் பின்பற்றி ஒற்றைக்கைவந்தனஞ் செய்வதைப்பார்த்தால் சிலசமயம் 'என் தலைவிதி' என்று தலையிலடித்துக்கொள்வதுபோலவும் இருக்கின்றது. இப்ப டியே ஒருகைவணக்க நவீனர்கள், பழக்கத்தால் ஆலயத்தின்முன் செல்லுங் காலங்களிலும் மெய்ம்மறந்து ஒரு கையைத்தூக்கி வணங்கிவிடுகின்றனர். அர்த்த புஷ்டியான நமது அனுஷ்டானங்களை நாம் கைவிடாதிருக்க அவ னருள் ஏற்படக்கடவதாக.

*　　　*　　　*　　　*

"எரி எழுகின்ற செம்பினுலியன்ற பாவையைப்பாவீ! தழுவேன மொழிவதற்கஞ்சி நம்பனே வந்துன் திருவடியடைந்தேன்" என்றார் திரு மங்கை மன்னர். "வண்டுகள் மொய்க்கப்பெற்ற கூந்தலையுடைய தமது மனைவி யைத் துக்கிக்கவிட்டு, பிறர் தனத்தையும் மனைவியாரையும் இச்சித்து, இம் மையில் பிணியையும் பழிப்பையு மடைந்து மறுமையில் இயமதூதர்களால் சிறைபிடிக்கப்பட்டு, வைவச்சுத பட்டணத்தை யடையுங்கால், இவனியற் றிய பாபகிருத்தியங்கட்குத் தண்டனையாக, தீயினுல் பழுக்கக் காய்ச்சப் பெற்ற செம்பினுலாய பதுமையைத் தழுவுமாறு செய்வதற்குப் பயந்து-நடுங்கி சர்வலோக சரண்யனே! நம்புவதற்குப் பாத்திரமானவனே! நைமி சாரண்யத்தி லெழுந்தருளியிருக்கும் நாயகனே! தாயனைய தண்ணளியானே! உன் திருவடிகளைச் சரணமென்றடைந்தேன்." என்பது இதன்பொருள். ஆதலின், பிறர் பொருளை இச்சித்தலும் பிறன் மனை விழைதலும் ஈண்டு மறுக்கப்பட்டதுடன், அவை சதமில்லை யென்பதையும் விளக்கி, சத்கர்மாக்

களைச்செய்து பகவத் பக்தியி லீடுபடவேண்டுமென்பதும் வற்புறுத்தப்பட்டது.

* * * *

"கபளே கபளே சைவ கர்த்தவ்யம் ஹரிகீர்த்தனம்" அதாவது ஒவ்வொரு கவளமாகச் சோறுண்ணும்போதும் பகவந்நாம ஸ்மரணை செய்ய வேண்டுமென்பது. இதை, விவேகிகளாகிய நமது ஆன்றோர்கள் நித்யகர்ம விதிகளாகச்செய்து கர்மத்தை வற்புறுத்தியிருக்கிறார்கள். மனிதன் துயில் நீங்கும்போதே "ஸ்ரீராமா! கிருஷ்ணா! சிவா!" என்று சொல்லிக்கொண்டே எழவேண்டும்; எழுந்தபின், அதிகாலையிலேயே 'கிருஷ்ணா, ராமா, கோவிந்தா' வென்று சொல்லிக்கொண்டு சமீபத்திலுள்ள புண்ய நதிகளுக்குச் சென்று ஈஸ்வரநாமத்தை ஸ்மரித்துக்கொண்டே ஸ்நானஞ் செய்ய வேண்டும்; அப்பால், ஜபதபங்கள் செய்யவேண்டும்; பிறகு வீட்டேகியதும் சிவ, விஷ்ணு பூஜைசெய்து, பின்பு சமயாசார நூல்களைப் பாராயணஞ் செய்யவேண்டும். பாராயணமானபின் உணவருந் தம்போதோ ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம், சிவார்ப்பணம்' என்று சொல்லி உண்ணவேண்டும். உண்டபின் சத்சங்கத்தில் ஆத்ம விசாரஞ்செய்யவேண்டும்; பிறகு மாலையில் அந்தி நீர்க்கடன் (சந்தியாவந்தனம்) அளித்துவிட்டு, ஆலயங்களுக்குச் சென்று பகவானைத் தரிசித்துவிட்டு, ஔபாசனஞ்செய்து, பின்னர் இராப்போஜனங்கொள்ளவேண்டும். போஜனத்தின்பின் சத்காலக்ஷேபம்;—அதாவது புண்ய கதைகளையோ புராண இதிகாசங்களையோ பிறர் சொல்லக் கேட்டுப் படுக்கவேண்டும். நித்திரைக்குச் செல்லுங்கால் இறைவனைத் துதித்துச் சயனிக்கவேண்டும். இம்மட்டோ? பசுவைக்கண்டால் பக்தியுடன் பூஜை செய்யவேண்டும். அரசு, வில்வம் முதலிய மரங்களைக்கண்டால் வலம்வந்து வணங்கவேண்டும்; இதற்கு ஆதாரம் அரசமரத்தின் அடிப்பாகத்தில் பிரம்மாவும் இடைப்பாகத்தில் விஷ்ணுவும், மேற்பாகத்தில் சிவபெருமானும் வசிப்பதான ஐதீகம்; துளசிச் செடியைக்கண்டால் பிருந்தாவனத்தின் ஞாபகம். கோபுரங்களைக் காணுந்தொறும் 'கோபுரதரிசனம் பாபவிமோசனம்' என்ற வாக்கியப்படி நமஸ்காரம்; பெரியாரைக்கண்டால் அஞ்சலிபந்தம், 'குழந்தைகளைக்கண்டால் 'கண்ணா' என்று கிருஷ்ணபகவானெனப்பாராட்டி அழைக்கும் அன்பான வசனங்கள்; இவையன்றி சூர்யனைக்கண்டால் நமஸ்காரம்; கருடனைக்கண்டால் விஷ்ணுத்தியானம்; ரிஷபத்தைக்கண்டால் சிவஸ்தோத்திரம்; குரங்கைப்பார்த்தால் ஆஞ்சநேயனென்ற அபாரபக்தி; யானையைக் கண்டால் ஆதிமூலமே என்றழைத்த கஜேந்திரனைக் கணத்தில் வந்து காத்த ஐயனின் எண்ணம்; மீன்களைப் பார்க்குங்கால் மச்சாவதார மகிமை; பன்றியைக்கண்டால் வராகாவதார வைபவம்; நாயைக்கண்டால் வைரவமூர்த்தியின் நாமஸ்மரணம். இங்ஙனம் எதையும் ஈஸ்வர பாவத்தில் வைத்து ஜீவ காருண்யம், ஈஸ்வர பக்தி, தயை முதலிய மோக்ஷசாதனங்களை நமது முன்னோர்கள் நம்மிடத்தில் இயற்கையாகவே ஜனிக்கும்படி செய்திருக்கிறார்கள். அவர்களுடைய மஹோன்னத மகிமைகளையும், ஆசாரங்களின் அரிய பெருமைகளையும் நாம் மறந்து கைவிடாது, புறச்சமயப்புதரிலே விழுந்து மாயாது, விவேகிகளாய் ஆசாரங்களையும் மதானுஷ்டானங்களையும் உயிரினும் பெரிதென நம்பி, கர்மயோகிகளாகி—பக்தர்களாகத் திகழ்ந்து—ஞானிகளாய்ப் பிரகாசித்து ஈஸ்வரனது கருணைக்குப் பாத்திரர்களாகி முடிவில் முத்தி யின்பத்தை அடையக்கடவோம்.

S. V. V.

---

## நல்லொழுக்கமும், தீயொழுக்கமும்.

ஒழுக்கமென்னுஞ் சொல்லாற் பெறப்படும் பொருள் நன்னடத்தையே யாயினும், அச்சொற் பிரயோகம் நாளடைவில் தீய நடத்தைக்கும் வழங்கப்பட்டு வருவதால், இப்போது நன்னடத்தையே என்னும் பொருளன்றி நடத்தை என்னும் அம்மாத்திரையே பொருள் பயந்து, சன்மார்க்கம், துன்மார்க்கமாகிய இரண்டினுக்கும் பொதுமையாக நிற்றலின் அப்பொதுமை நீக்கல்வேண்டி "நல்லொழுக்கமும் தீயொழுக்கமும்" என்று அதனைத் தனித்தனி வேறு பிரித்து இத்தலைப்பெயர் கொடுத்தா மென்க.

நல்லன கடைப்பிடித் தொழுகலும், அல்லன தெரிந்து ஒழித்தலுமே ஒழுக்க மென்பது. ஒழுக்க இலக்கணங் கூறுவதினும், ஒழுக்கவரலாறு கூறுவதினும், பற்பல தேசக்காரர் பற்பல காலங்களில் பலபல அபிப்பிராயம் கொண்டு ஒருவரோடொருவர் மாறுபட்டும், உடன்பட்டும், வாதம் நிகழ்த்தி வந்திருக்கின்றார்கள். இவர் தம்முள் பெரிதும் மாறுபட்டு உரைப்பார் இரு திறத்தினராவர். "நன்மையின் இலக்கணம் இத்தகையது, தீமையின் இலக்கணம் இத்தகையது என்று அறுதியிட்டுக்கூறி அவை யிரண்டினுடைய இலக்கணங்களையும் நமக்கு அறிவுறுத்திவரும் தெய்வீகத் தன்மைபொருந்திய ஓர் சக்தி நமக்குள் அமைந்துகிடக்கிறதென்றும், அதைத்தான் மானதசாட்சி என்று கூறுகின்றோம்" என்றும் உரைப்பார் ஒரு பிரிவினர். இயற்கையுணர்வே ஒழுக்கத்திற்குக் காரணம் என்பதிவர் கொள்கை.

"இயற்கையாகவே நன்மை தீமைகளை அறிந்துகொள்ளக் கூடிய சக்தி நம்மிடமில்லை; நாம் உலக அனுபவத்தினாலும், பலரோடு உறைந்து வாழ்வதினாலும் சிறிது சிறிதாக அறிவுவிளங்கிக் கடைசியில் இன்பம் பயப்பனவற்றையெல்லாம் நன்மை யெனக்கொண்டு ஒழுகியும், துன்பம் பயப்பனவற்றையெல்லாம் தீமை யெனக்கொண்டு ஒழித்தும் வருகின்றோம். ஆகவே அனுபவமுறையினாலேயே ஒழுக்க முண்டாயிற்று" என்று உரைப்பார் மற்றோர் பிரிவினர். பயன்கருதி அனுபவமுறையால் ஏற்பட்டதே ஒழுக்கம் என்னும் கொள்கையே இவர்தம் கொள்கையாம். இவ்விரண்டு கொள்கைகளும் தம்முள் மாறுபாடுடையனவேயாம். ஆனால் இவ்விருவர்தங் கொள்கையும் ஒரு விஷயத்தில் ஒன்றாயிருக்கிறது; "பிறருக்கு ஒருவிதமான இடையூறும் ஒருவிதத்தினும் நிகழாதபடி எக்காரியத்தையும் மனிதன் செய்யக் கூடிய சுதந்தரமுடையவன்" என்னும் இந்நீதி இருதிறத்தாருக்கும் உடன்பாடாம். இந்நீதிவழி நின்றொழுகுவதெல்லாம் ஒழுக்கமாகும் ஏனையவெல்லாம் ஒழுக்கமாகாதெனத் தெளிவுறுத்தி மேற்கூறியகருத்தமைய, சுதந்தரத்தைக் குறித்து ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் என்னும் தத்துவ சாஸ்திரியார், (Every man is free to do that he wills, provided he infringes not the equal freedom of any other man) அதாவது—"மனிதன் தன்னிஷ்டப்படி

நடக்க உரிமையுடையவன்; ஆனால் பிறருடைய சுதந்தர உரிமைக்கு ஒரு சிறிதும் தன்னால் இழுக்கு வாராதபடி மட்டும் பார்த்துக்கொள்ளல் வேண்டும்'' என்று தமது ஜனசாரநூலில் வெளிப்படுத்தியிருக்கிறார்.

இனி "ஒழுக்கத்திற்கு இயற்கையாகவுள்ள உணர்வு, இறைவனால் கொடுக்கப்பட்ட சட்டமாதலால் அதன்படி நடத்தலே நமது கடமை. அதற்குமேற் கொண்டு அதன் உற்பத்தியை ஆராயப்புகுதல் மடமையாம்'' என்னும் கட்சியாரின் வலிமை எம்மட்டு மிருக்கிறதென ஒருவாறு பார்ப்போம். ஒரே கடவுளால், ஒரேமனிதவர்க்கத்திற்கு ஏற்படுத்தப்பட்ட ஒழுக்கவிதி எல்லோருக்கும், எக்காலத்திலும் ஒரேதன்மைத்தாகவன்றோ விருத்தல் வேண்டும்? உண்மையில் பார்த்தால் அங்ஙனமில்லையே. கொலைத்தொழில் செய்யாவிட்டால் கடவுள் தண்டிப்பாரென்று பிஜியன்ஸ் (Fijians) என்னும் ஜாதியார் கொலைத்தொழில் செய்வதையே முதற்கடமையாகக் கருதுவதன்றியும், கருதியபடிசெய்தும் வந்திருக்கின்றார்கள்! இன்னும், எகிப்தியருக்குப் பொய்யுரைத்தல் சிறந்த குணமாம்! துருக்கியருக்குக் களவாடல் அவர் தம் ஒழுக்கநூலில் உள்ள விதியினுள் ஒன்றாம்! ஒரு மனைவிக்கு மேல் மறு மனைவியை மணம்புரிதல் கூடாதாமென ஐரோப்பியருக்கும், அமெரிக்கருக்கும் ஒழுக்கநூல் ஆணை தந்திருக்க, இந்தியாவிலும், சீனாவிலும், துருக்கியிலும், மனைவியர் பலரை வதுவைசெய்தல் குற்றமன்றாமென விதியிருக்கின்றது. இவை இப்படி யிருப்பானேன்? இவைபோன்ற பல ஆசங்கைகளெழும் போது ஒழுக்கத்திற்குத் தெய்வீக உற்பத்தி கூறுவோர் சமாதானங் கூற வகையின்றி விழிக்கிறார்களென அனுபவத்தைக் காரணமாகக் கூறுவோர் ஆட்சேபிக்கிறார்கள். ஒழுக்கமும், மனச்சாட்சியாகிய அந்தக்கரணமும் ஏற்கனவே இயற்கையாக உள்ளனவன்றாமெனின், "எப்போது எங்ஙன மவை யுண்டாயின?'' என மறுத்து வினவும் இயற்கைக் காரணம் கூறுவோர்க்கு அனுபவமுறை கூறுவோர் மறுமொழி பகர வகையின்றி மயங்குகின்றார்கள். ஒவ்வொருவருக்கும், அவர்கள் செய்யும் செய்கைக்கும், அச்செய்கையின் பயனுக்கும் இடையே தோன்றிவரும் அனுபவத்திலிருந்தே ஒழுக்கவுணர்வு ஏற்படுகிறது. சில செய்கைகள் செய்வதினால் துன்புற்றும், துன்புறக்கேட்டும், பார்த்தும் வருகின்ற நாம், அச்செய்கைகள் தீயனவென்றும், அவைகளைச் செய்தலும் தீயபலன் விளைவிக்குமென்றும் தெரிந்து விலக்கி வருகின்றோம். இம்முறைப்படியே நலம் பயப்பனவற்றைத் தழுவி வருகின்றோம். கல்வியினாலும், கூட்டுறவினாலுமே ஒழுக்கமும் மனச்சாட்சியும் உற்பத்தியாகின்றன என்று சொல்லுதல் பொருத்தமுளதாமென்றே வைத்துக் கொள்ளினும், முதன்முதல் கல்வி வேண்டும், கூட்டுறவு வேண்டும், என்னும் விழைவு ஒருவனுக்கு எங்ஙன முண்டாயிற்று? உண்டாகக் காரணமென்ன? மனச்சாட்சி என்னுமோர் காரணம் ஏற்கனவே இல்லாதிருப்பின் விழைவு எங்ஙன முண்டாகும்? தானாகவே உண்டாயிற்றென்பாமெனின், விழைவு ஒரு புறப் பொருளையாவது, அல்லது அகப் பொருளையாவது பற்றி நிகழுமேயன்றிப் பற்றுக்கோடில்லாமல் நிகழாது. அங்ஙனம் நிகழும்போதும்,

அப்பொருளையும், விழைவையும் சம்பந்தப்படுத்தற்கு ஓர் கருவி இன்றியமையாது வேண்டப்படும். ஓர் பொருளைக்காண்டற்குக் கண்ணொளியும், கதிரவனொளியும், அப்பொருளும் இன்றியமையாதனவா யிருத்தல்வேண்டும். கண்ணொளியுங் கதிரவனொளியு மிருந்து பொருளில்லாவிடில் இல்லாத அப்பொருளை எங்ஙனம் காணக்கூடும்? கதிரவனில்லாவிடில் பொருளுங் கண்ணொளியு மிருந்து என்ன பிரயோசனம்? கதிரவனிருந்தும் குருடன் பொருளைக் காண்பானோ? ஆகவே இம்மூன்றும், இவைகளையன்றி வேறொரு பொருளுங்கூட வேண்டியிருக்கின்றன. ஏனெனில் இம்மூன்றும் வாய்ந்திருப்பினும் பிரேதத்திற்கு அப்பொருள் விளங்கக் காணாமையினாலென்க. அதுபோலவே ஓர் செய்கையினையும், அதன் பலனையும், அப்பலனால் விளையும் நன்மை தீமையையும் நாம் அனுபவத்தில் அறிகிறோமாயினும், அனுபவம் என்பது ஒரு காலத்தில் உண்டாகாமல் பல காலத்தில் நிகழ்ந்த செயல்களை யெல்லாம் ஒருங்கு சேர்த்துக் காண்டலே யாதலானும், இச்செய்கைகளை மறவாது ஒருங்கு சேர்ப்பிக்கக்கூடிய ஓர் கருவி இருந்தாலன்றி நாம் முன்னடைந்ததைப் பின் மறந்து போவோமாதலானும், அனுபவத்திற்கும் ஓர் கருவி வேண்டுமெனவும், அக்கருவியே மனச்சாட்சி யெனவும் கூறுவர் இயற்கையைப்பற்றிக் காரணங்கூறுவோர். இருவர்தங் கூற்றும் ஒன்றினுக்கொன்று மாறுபட்டிருப்பினும், இரண்டினும் உண்மை யிருக்கிறது. ஆகவே ஒழுக்கமும், அவ்வொழுக்கத்தினை அறிந்து நடத்தற்குரிய சக்தியும், இயற்கையாகவே யுள்ளனவென்றும், அனுபவமும் நூலறிவும் உள்ள வொழுக்கத்தைத் திருத்தமுறக்காட்டி அபிவிருத்திக்குக் கொண்டுவருகின்றனவென்றும் கொள்ளலே தகுதி. காலவேறுபாட்டினாலும், இடவேறுபாட்டினாலும், ஏனைய மாறுபடுவனபோல் ஒழுக்கமும் மாறுபட்டு நிற்கும். எவ்வெக்காலங்களில் எவ்வெவ்விதமாக ஒழுக்கம் மாறுபடுகிறதோ அதற்கு இணங்கி அவ்வொழுக்கத்தை அனுசரிப்பதை நாம் ஒவ்வொருவரும் கைக்கொள்ளவேண்டும். இதுபற்றியே "உலகத்தோ டொட்ட வொழுகல் பல கற்றுங்—கல்லா ரறிவிலா தார்" என்றார் ஆசிரியர் திருவள்ளுவனாரும். இனி ஒருவன் தன்மாட்டொழுகும் ஒழுக்கமெனவும், பிறர்மாட்டொழுகும் ஒழுக்கமெனவும், ஒழுக்கம் இருவகைப்படும்: கள்ளாமை, பொய்யாமை முதலியன ஒருவன் தன்மாட்டொழுகும் ஒழுக்கமும், கொலை தவிர்தல், களவாடா திருத்தல் முதலியன பிறர்மாட்டொழுகும் ஒழுக்கமுமாம். அறிவின் பயன் கல்வியாகவும், கல்வியின் பயன் ஒழுக்கமாகவும், ஒழுக்கத்தின் பயன் இன்பமாகவும், இன்பமனுபவிப்பது உயிராகவும் இருத்தலால் ஒழுக்கமின்றி உயிர் இருப்பினும் துன்பமே பயக்கும்; ஆதலால் உயிரினும் ஒழுக்கமே பாதுகாக்கப்பட வேண்டும் என்னும் உண்மை தோன்றவே

ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க,
முயிரினு மோம்பப் படும்.

என்னும் திருவாக்கெழுந்திருக்கிறது.

சாஸ்வதி சபைத்தலைவர், டர்பன்-நெட்டால்.

---

## புதிய ஜீவிய சந்தாதாரர்.

மேற்கு காமயூட் (ரங்கூன்) திருவாளர்-வி. மாசிலாமணி பிள்ளை யவர்கள் நமது "ஆனந்தபோதினி" யின் ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்துள்ளார்கள். அவர்கட்கு எமது அன்பார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். ப-ர்.

# "அறிவில்லாதவன்"

நண்பனே! உன்னையே நீ 'அறிவில்லாதவன்' என்று சொல்லிக்கொள்வதுமுண்டு. பிறன் உன்னை 'அறிவில்லாதவன்' என்று கூறுவதை நீ நம்புவதும் உண்டு. இதுதான் தப்பிதங்கள் எல்லாவற்றுள்ளும் தலைசிறந்தது. தன்னையே அறிவில்லாதவன் என்று கருதுகிற ஒருவன் தன்னுடைய வாழ்நாளையே வீணாக்கி விடுவதோடு தனக்குத்தானே குழியுந்தோண்டி புதைக்கப்பட்டுப் போகின்றான். தன்னைக் கெடுத்துக்கொள்ள விரும்புகிற ஒருவன் இதைவிட வேறுவழியைத் தேடவேண்டிய அவசியமேயில்லை. ஆகவே, நீ இந்த எண்ணத்தைவிட்டு மாறுதலடையவேண்டும். மக்கட் பிறவியில் 'அறிவில்லாதவன்' என்று ஒருவனுமில்லை யென்பதே எமது முடிவான எண்ணம். ஆதலின், இதைப்பற்றி இங்கே மிகச் சுருக்கமாக விளக்குகிறோம்.

அறிவு:—முதலாவது 'அறிவு' என்பது எது? என்பதை யறிய நீ மிகவும் ஆவலாயிருப்பாய்! அது எதுவாயிருந்தாலும் அதைப்பற்றி நீ இப்பொழுது கவலை யடையவேண்டாம். பின்னால் குறிப்பிடுகிற முறையில் தான் நீ அந்த அறிவை அறிந்துகொள்ளவேண்டும். ஒவ்வொருவருடைய மண்டையிலும் பிரகாசமில்லாத மாணிக்கக்கல்லைப்போன்ற ஒருகல் இயற்கையாகவே அமைக்கப்பெற்றிருக்கின்றது. அதுதான் 'அறிவு' என்பதை நீ முதலில் உறுதியாக நம்பு. இன்னும் இதை விளக்கமாகக் கூறவேண்டுமானால் சிவப்புக்கல் வியாபாரிகள் 'தலம்' என்று குறிப்பிடுவதுபோல அது ஒரு பட்டை தீட்டப்பெறாத கல் என்றே கூறலாம். இது இறைவனால் சீவர்களிடத்து அருள்நோக்கங்கொண்டு அமைக்கப்பெற்றதாகும். ஆனால், இதற்கு இயற்கையாகப் பிரகாசமில்லை. இது பிரகாசிக்கவேண்டுமானால், எந்த மனிதனும் 'தலம்' ஆகிய தனது அறிவை 'உலகம்' ஆகிய சாணைக்கல்லில் தீட்டித்தான் ஆகவேண்டும். எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகத் தீட்டுகின்றானோ அவ்வளவுக்கவ்வளவு அதிகமாக ஜ்வலிக்கும். எத்தனை பக்கங்களில் தீட்டினாலும் அத்தனை பக்கங்களிலும் ஒளிவீசும். ஆகவே இந்தப் புதிய முறையினால், "கல்லே அறிவு, அறிவே கல்" என்று நீ உணர்ந்துகொள்ளவேண்டும்.

இலக்கணம்:—தலத்தைப்போன்ற அறிவு என்ற கல் இல்லாத மனிதன் இல்லவேயில்லை. அத்தகைய கற்களில் வேற்றுமையும் இல்லை. ஆனால், சிறிது தீட்டியவன், சிறிது அதிகந்தீட்டியவன், அதிகமாகத் தீட்டியவன், முற்றிலுந் தீட்டியவன் என மக்களை நால்வகையாகப் பிரிக்கலாம். இனிச் சாணைகளிலும் கருங்கற்சாணை, மாச்சாணை, கற்பலகைச்சாணை, அரக்குச் சாணை, செம்புச்சாணை எனப் பலவகையுண்டு. இவற்றைப்போல உழவுச் சாணை, வணிகச்சாணை அரசுச்சாணை, கைத்தொழிற்சாணை, கல்விச்சாணை எனப் பிரிவுபடுத்திக் கூறலாம.

உட்பிரிவு:—இனி, இந்தச் சாணைகளில் அளவு வேறுபாடுகளும், நிற வேறுபாடுகளும் இருப்பதுபோல நமது ஒவ்வொரு சாணைவகையிலும உட்பிரிவுகள் உண்டு. உதாரணமாகக் கல்வி என்ற செப்புச்சாணைவகையில் சிற்பம, வைத்தியம், கணிதம், வானம், ஞானம் என்ற அளவு வேறுபாடுள்ள சாணைகளும், அந்த அளவுள்ள சாணைகளிலேயே வியாசம் எழுதுதல், பிரசங்கஞ்செய்தல், கவிபாடுதல், ஆராய்ச்சிசெய்தல், பிறமொழி அறிதல் ஆகிய நிறவேறுபாடுள்ள சாணைகளும் பல உண்டு. இவ்வாறே மற்ற உழவு, வணிகம், அரசு, கைத்

தொழில் ஆகிய நால்வகைச் சாணைகளிலும் அளவுவேறுபாடுகளும், நிறவேறு பாடுகளும் கூறலாம். இவற்றை விரிக்கின் மிகைபடக்கூறல் என்ற குற்றத்தின் பாற்படுமாதலின் விரிவஞ்சி இத்துடன் நிறுத்துகிறேம். ஆகவே இதனால் ஒரு மனிதன் தனக்குஇருக்கின்ற அறிவு என்ற கல்லே எந்தெந்தப் பக்கத் தில், எந்தெந்தச் சாணைகளில் தீட்டிக்கொள்ளுகின்றானே அந்தந்தப் பக்கங் களிலெல்லாம் அவன் பிரகாசிக்கின்றான் என்பது புலப்படும்.

விளக்கம்:—சிற்பசாஸ்திரியினுடைய அறிவிற்கும், வைத்தியனுடைய அறிவிற்கும் சாணை வேறுபாடுகளைத் தவிர வேறென்றுமில்லை. அதுபோலவே பிரசங்கஞ் செய்பவனுடைய அறிவிற்கும் கவிபாடுகின்றவனுடைய அறிவிற் கும் தீட்டப்பெறுகின்ற சாணையின் நிறவேறுபாட்டைத்தவிர மற்றென்று மில்லை. இவர்கள் எல்லோருமே அறிவுடையவர்கள்தான். இதனால் மக்கட் பிறவியில் 'அறிவில்லாதவன்' என்று எவனுமேயில்லை என்பது உண்மை.

சொல்லவேண்டுமானால்:—குயவனுடைய அறிவு கலெக்டருக்கு இல்லை. தச்சனுடைய அறிவு தாசில்தாருக்கு இல்லை. ஒட்டனுக்கு இருக்கும் அறிவு மந்திரிக்கு இல்லை. நெசவு செய்யும் அறிவு கவர்னருக்கு இல்லை. திருட னுடைய அறிவு ஜட்ஜிக்கு இல்லை. அதிகமாகக் கூறுவானேன்? சிறுபெண்க ளுடைய ஒப்பாரிவைத்து அழும் அறிவு தொல்காப்பியத்திற்குப் பொருள் கூறும் சிறந்த புலவனுக்கு இல்லையென்றுதான் சொல்லியாகவேண்டும். அவ் வளவுதான். ஆகவே இதில் அறிவுடையவர்கள் யார்? அறிவில்லாதவர்கள் யார்? ஒருவருமில்லை.

கேள்வி:—நண்பனே! இதுகாறுங் கூறியவற்றைக்கொண்டு ஒருவாறு உண்மையை உணர்ந்தாயா? இனிமேல் உன்னை 'அறிவில்லாதவன்' என்று பிறர் சொல்லவோ நீயே கூறிக்கொள்ளவோ முடியுமா? நன்றாய்ச் சிந்தித் துப்பார். நீ அறிவில்லாதவனா?

ஒன்று உண்மை:—ஆனால் ஒன்றைமட்டும் ஒப்புக்கொள்ளுதல் வேண் டும். அது, அதிக ஒளியை வீசக்கூடிய அறிவையுடையவன், குறைந்த ஒளியை வீசக்கூடிய அறிவையுடையவன் என்பதே. இவ்வுண்மையான வேற்றுமை ஒன்று இருந்துதான் தீரும். ஒருவன் தனது அறிவுக்கல்லை பல பக்கங்களிலும் பலவித சாணைகளிலும் தீட்டிப் பிரகாசிக்கச் செய்துகொண் டிருப்பான். மற்றொருவன் ஒன்றிரண்டு பக்கங்களில்மட்டும் இரண்டொரு சாணைகளில் தீட்டிவிட்டிருப்பான். இதை ஒப்புக்கொள்ளாமலிருக்கமுடி யாது. ஆகவே நீ அறிவில்லாதவன் அல்லை. ஆனாலும், அதிகமான துறை களில் அழகுபெறத் தீட்டிக்கொள்ளாதவனாக இருக்கலாம். அப்படியானால், அது உன்னுடைய முயற்சியில்லாத குற்றமே ஒழியப் பிறவியின் குற்றமல்ல என்பதை உணர்ந்துகொள்ளவேண்டும்.

முடிவு:—இந்தச் சுருக்கமான கட்டுரையினால், 'அறிவில்லாதவன்' என்று ஒருவனிருக்கமுடியாது என்பதும், எல்லாமக்கட்கும் இயற்கை யாகவே அறிவு உண்டு என்பதும், அதைத் தீட்டுவதில் உள்ள துறைவேற் றுமை முயற்சி வேற்றுமைகள் மட்டும் சிறிது உண்டு என்பதும் இனிது புலப்பட்டிருக்கலாம். ஆகவே நண்பனே! உனக்கும் அறிவு உண்டு! நீயும் ஒரு மனிதனே! சிந்தித்துணர நேரமில்லாமல் உன் வாழ்நாளை வீழ்நாளாக்கி விட்டாய். கடந்தகாலம் ஒழியட்டும். எதிர்காலத்தை எதிர்பார். நீ நினைத் தால் இவ்வுலகிற் பற்பல அரிய செயல்களைச் செய்து முடிக்க முடியும். உன் னால் முடியாதகாரியம் இவ்வுலகத்திலொன்றுமில்லை.

எழுந்திரு:—பகவான் ஸ்ரீ கௌதம புத்தர், மகமதுநபிகள், ஏசுகிறிஸ்து நாதர், மெய்கண்டதேவர், இராமாநுஜர் முதலிய அவதாரபுருடர்களும், ஸ்ரீ இராமகிருஷ்ணர், விவேகானந்தர் போன்ற ஞானபுருடர்களும், சிவாஜி, சோழன், பாண்டியன் முதலிய புவி அரசர்களும், கம்பர், வள்ளுவர், இளங்கோவடிகள் முதலிய கவி அரசர்களும், கோபால கிருஷ்ண கோகலே, திலகர் பெருமான், C. R தாஸ், டாக்டர் நாயர், சர். பி. தியாகராயர் போன்ற இறந்தகால தேசாபிமானிகளும், மகாத்மாகாந்தி, வைக்கம் வீரமூர்த்தி, பனகாலரசர், திரு.வி. கலியாணசுந்தர முதலியார் போன்ற நிகழ்கால தேசாபிமானிகளும் உனது முன்னோர்கள் என்பதை நினைவு கூர்க. நீ அவர்கள் வழிவந்தவீரன் என்பதை உணர்க. அப்பொழுதே—அந்த நிமிடமே உனக்குள்ளேயே ஒருஒளிவீசுவதைக் காண்பாய். நீ பிறந்த சமயமும், உன்னைத் தாங்கிய தாய் நாடும், உன்னைவளர்த்த தாய்மொழியும் உனது வீரம்பொருந்திய அருஞ்செயல்களை எதிர்பார்க்கின்றன! தம்முடைய மகிமைகுன்றிய இக்காலத்தில் அவைகள் அழகிய கரங்களைநீட்டி உன்னை நோக்கி அன்போடு அழைக்கின்றன. நண்பனே! எழுந்திரு! உனது அறிவை உலகிற்குப் பயன் படுத்துக! கி. ஆ. பெ. விசுவநாதபிள்ளை, திருச்சிராப்பள்ளி.

## இந்தக் குடும்பம் எப்படி?

கணவன்:—அடி! கழுதை! உனக்கு அறிவில்லையா?

மனைவி:— யார் கழுதை? ஏகாந்தத்திலாவது நான் உங்களை உதைத்ததுண்டா? எனக்கா அறிவில்லை.

கணவன்:—குடும்ப ஸ்திதி தெரிந்தும் கல்லிழைத்த அட்டிகை வேண்டுமென்று ஒருகாலால் நிற்கிறாயே?

மனைவி:— அடுத்த வீட்டு அழகலெக்ஷிமி போட்டுக்கொண்டிருக்கிறாளே? என்னை முதலிலேயே பார்த்துத்தானே விவாகம் செய்துகொண்டீர்கள்? நான் என்ன நொண்டியா ஒற்றைக் காலால் நிற்க?

கணவன்:—பக்கத்து வீட்டுக்காரன் நூறு ரூபாய் சம்பாதிக்கிறான்.

மனைவி:— உங்களை யார் ஐந்நூறு ரூபாய் சம்பாதிக்க வேண்டாமென்று கையைப்பிடித்துக்கொண்டார்கள்? மனைவி யென்ற விஷயத்தில் அவளைவிட நான் ஏதாவது குறைவாக இருக்கிறேனா?

கணவன்:—'புருஷன்' என்ற விஷயத்தில் நான் ஏதாவது குறைந்திருக்கிறேனா?

மனைவி:— முன்யோசனையில்லாமல் நேற்றிரவு ஏன் 'செய்து போடுகிறேன்' என்று வாக்களித்தீர்கள்.

கணவன்—அந்த சமயத்திற்கு அந்த வார்த்தை.

# மூட வாலிபர்கள்.

இப்போது பிறந்து, சோற்றுக்குத் தட்டின்றி வளர்ந்து, அடக்குவாரின்றித் தலைநிமிர்ந்து எருமைக் கடாக்களைப்போல் திரிந்துகொண்டிருக்கும் சில வாலிபர்களுக்கு நல்லறிவு விருத்தியாகத் தக்க கல்வி போதிக்கப்படாமையால், அவர்கள் மூடமும், தேகத்திமிரும் அதிகரித்து எவருக்கும் அடங்காமல் முள்ளம்பன்றிகளைப் போல் சிலிர்த்துக் கொண்டு தெருக்களில் சஞ்சரிக்கிறார்கள். பாத்தையர் தெருக்களில்தான் இவர்களுடைய சஞ்சரிப்பு அதிகமாயிருக்கின்றது; ஏனெனில், இவர்களுடைய வீரப்பிரதாபங்களைக் கண்டு மெச்சுவோர் அவரே. இவர்கள், தெருக்களில் வரும் எத்தகைய மனிதர்களையும் சட்டைபண்ணாமல், சில சமயங்களில் சில மூடத்தனமான விளையாட்டுக்களை நடத்துகிறார்கள்; சில சந்தர்ப்பங்களில் அடிதடிச் சண்டைகள் நடத்திப் பெரும்போர் விளைக்கிறார்கள். இந்த விவேகங்கெட்ட விளையாட்டுக்களாலும், சண்டித்தனமான சண்டைகளாலும் பொது ஜனங்களுக்குண்டாகும் துன்பங்கள் எண்ணில: சதைத்திமிர்கொண்ட இந்தத்தடியர்கள் விளையாடுங்காலத்தில் சாணிகளை வாரி ஒருவர்மீதொருவர் எறிகின்றனர்; சாக்கடைச்சேற்றை அள்ளிச் சிதறுகின்றனர்; எச்சில் இலைகளை எடுத்தெறிகின்றனர்; குப்பைத்தொட்டியிலுள்ள குப்பைகளை வாரி யிறைக்கின்றனர்; சாக்கடைத் தண்ணீரை அள்ளி ஊற்றுகின்றனர்; வெற்றிலை பாக்கு எச்சிலைத் துப்புகின்றனர்; வாயிலுள்ள தம்பலத்தைக் கையாலெடுத்து வீசி யெறிகின்றனர்; சண்டை நடத்துங்காலத்தில் கற்களை வாரி யெறிகின்றனர்; பாணாத் தடிகளைச் சுழற்றுகிறார்கள். இவர்களால் வாரி யடிக்கப்படும் ஆபாசங்களெல்லாம் தெருவிற் செல்லும் பொது ஜனங்களின்மேற் படுகின்றன; கற்களும், தடிகளும் தாக்குகின்றன; அவற்றால் அந்த ஜனங்கள் பெருந்துன்பமடைந்து, அவர்களை நோக்கி, "என்ன அப்பா! இப்படிச் செய்யலாமா?" என்று கேட்டால் அந்தப் போக்கிரிகள் அவர்கள்மீதும் புலிபோற் சீறிப்பாய ஆரம்பித்து விடுகின்றனர். அதனால் அவர்கள் வாயை மூடிக்கொண்டு பேசாமல் போகவேண்டியவர்களா யிருக்கிறார்கள். இந்தத் தடிக்கடா வாலிபர்கள் தாய் தந்தையர்களுக்கோ, மற்றவர்களுக்கோ அடங்கினவர்களல்லர்; அதனால் இவர்களை அடக்குவார் எவருமில்லை. இவர்களைப் பற்றிப் போலீஸ்காரரிடம் சொன்னால், அவர்கள், "நீங்கள் ஒதுங்கிப்போகாமல் அவர்களுக்குச் சமீபத்தில் ஏன் போனீர்கள்?" என்று மூறையிட்டவர்களுக்கே புத்தி கூறுகிறார்கள். இவ்விஷயத்தில் அவர்களுடைய அதிகாரம் அப்ளாக்காரமாகவும், வெங்காரமாகவும், படிக்காரமாகவும், மிளகாய்க்காரமாகவும், மிளகுக்காரமாகவும், பொரிக்காரமாகவும், அக்கிரகாரமாகவும் மாறியிருக்கிறது. இந்தத் துஷ்ட வாலிபர்களைக் கடவுள்தான் தண்டிக்க வேண்டும்.

இத்தகைய திமிர்க்கொண்ட வாலிபர்கள் இப்போது சென்னையில் மலிந்திருக்கின்றனர். சில தினங்களுக்குமுன் சென்னைத் தொண்டை மண்டலம் ஸ்கூலுக்கெதிரிலுள்ள தெருவில் மாலை 5½ மணிக்கு இரண்டு வாலிபர்கள் வாய்நிறைய வெற்றிலைபாக்குப் போட்டுமென்று அந்தத்தம்ப

லத்தைக் கையில் எடுத்து எடுத்து ஒருவர்மீதொருவர் விசிறி யடித்துக் கொண்டிருந்தார்கள். அச்சமயத்தில் அவ்வழியாகச் சென்ற சாது ஒருவர், அவர்களுடைய அயோக்கியத் தனத்தைப் பார்த்து, "இப்போது இவர்கள் பக்கத்தில் சென்றால் நம்மீதும் எச்சிற்றம்பலம் படும்" என்று சிறிதுநேரம் தாமதித்து நின்றார். சிறிது நேரத்திற்குள் அந்தத்தடியர்களில் ஒருவன் தங்கசாலைத் தெருப்பக்கம் ஓடினான். சாது, "இனிமேல் நாம் பயமின்றிச் செல்லலாம்" என்று நடந்தார். அவர், நான்கடி யெடுத்து வைப்பதற்குள், ஓடினவன் திரும்பி, நின்ற தடியனிடம் ஓடிவந்தான்; அவன் தம்பலத்தைக் கையில் துப்பி, வந்த தடியன்மேல் எறிந்தான்; அப்போது சாது அவர்களுக் கெதிரில் போய்க்கொண்டிருந்தபடியால் அவன் எறிந்த தம்பல முழுவதும் அவருடைய மேல் வஸ்திரத்தில் பட்டு எங்கும் சிவப்பாகிவிட்டது; சாது, "நாம் எவ்வளவோ ஜாக்கிரதையாகத் தாமதித்துவந்தும் இந்த மூடர்களுடைய அருவருப்புச் செய்கையில் சிக்கிக்கொண்டோமே!" என்று விசனித்து, தம்பல மெறிந்தவனை நோக்கி, "தம்பி! இப்படிச் செய்ய லாமா?" என்று சாந்தமாகக் கேட்டார். அவன் முள்ளம் பன்றிபோல் சிலிர்த்துக்கொண்டு அவரைப் பார்த்தான். அவர் மிகுந்த அச்சத்தோடு பேசாமல் போய்விட்டார். இந்தப் போக்கிரிச் செயலைக்கண்ட இதர மனிதர்களும் ஒன்றும் பேசாமல் போய்விட்டார்கள். இது இக்கலிகால விபரீதத்தின் செயலே யாகும்.

**உண்மையுரைப்போன்.**

## "ஆனந்தபோதினி" வாரப்பதிப்பு.

தமிழ் நாட்டில் நமது "ஆனந்தபோதினி" மாதப்பத்திரிகை பதினான்கு ஆண்டுகளாக விசேஷ செல்வாக்கடைந்து முதன்மையுற்று விளங்கல் நேயர்களுணர்ந்த விஷயம். மத சமூக விஷயத்திலும் அரசியல் விஷயத்திலும் தடுமாற்ற மடைந்திருக்கும் இந்நாளில் சாதாரண மக்கட்கு உண்மையை விளக்கித் தக்க வழிகாட்ட "ஆனந்தபோதினி" வாரப்பதிப்பாக வெளிவரவேண்டுமென்று பல கனவான்கள் எம்மை வற்புறுத்துகின்றனர். நாட்டு நிலையை நோக்குமிடத்து அங்ஙனம் செய்தல் அத்தியாவசியமானதென்றே யாமும் கருதுகின்றோம். ஆயினும் வழக்கம்போல் சிறந்த அமைப்பில் மாத வெளியீடு வந்துகொண்டுதானிருக்கும். இடவசதிகருதி இதுகாறும் வாரப்பதிப்பில் சிந்தை செலுத்தாதிருந்தோம். நமது காரியாலயத்திற்கெனப் புதிதாக நிருமாணிக்கப்பெற்ற கட்டிடத்திற்கு ஆபீஸ் மாற்றப்பட்டிருத்தலால் கார்த்திகை மாதம் "ஆனந்தபோதினி" வாரப்பதிப்பு வெளியிடத் தீர்மானித்திருக்கிறோம். நேயர்கள் ஒவ்வொருவரும் பூரண ஆதரவு அளித்து வாரப்பதிப்புச் சந்தாதாரராவதோடு புதிய சந்தாதாரர்களையும் சேர்த்தனுப்பச் சித்தமாயிருக்கப் பிரார்த்திக்கின்றோம்.

**பத்திராதிபர்.**

# உலக அனுபவக் குறிப்புக்கள்.

சிலர், தங்கள் வீட்டில் நல்ல காரியங்கள் நடக்கும்போது அதிகப்பணம் செலவிட்டுப் பலருக்கு உயர்ந்த விருந்துச்சாப்பாடு நடத்துகிறார்கள். விளாங்காய்ப் பருமனுள்ள இலட்டுகளும், ஒருசாண் அகலநீளமுள்ள ஜிலேபிகளும் தயார் செய்கிறார்கள். சாப்பாடு பரிமாறும் சமயத்தில் ஏழைகள் பசிக்கொடுமையினால் தெருவில் கூவுகிறார்கள். விருந்து நடத்துவோர் அவர்களை அடித்துத் துரத்திவிட்டு, இடம்பமாக உடை யணிந்துகொண்டு வரும் வீண் ஜம்பக்காரர்களுக்கு மிகுந்த உபசாரத்தோடு சாப்பாடு பரிமாறுகிறார்கள். அவர்களிற் பெரும்பான்மையோர் தங்களுக்குப் பசி யிருந்தாலும், இலையிற் போடப்பட்டவைகளைத் தின்னுமல், அப்படியே போட்டுவிட்டு எழுந்துவிடுவதுதான் பிரபுத்தன்மையைக் காட்டுமென்று நினைத்து ஏதோ கொஞ்சம் சாப்பாடு பேருக்குமாத்திரம்தொட்டுப் பார்த்துவிட்டு இலட்டு, ஜிலேபி முதலிய பலகாரங்களையும், மற்றவைகளையும் அப்படியே இலையில் வைத்துவிட்டு எழுந்துவிடுகிறார்கள். அவைகளெல்லாம் நாய்க்கும் உதவாமல் தெருவில் எடுத்தெறியப்படுகின்றன. ஏழைகள் பசியால் கதற, அவர்களைக் கவனியாமல் இப்படி இடம்பவிருந்து நடத்துவோரும், ஜம்பத்துக்கு விருந்துண்ணவந்து உயர்ந்த ஆகாரங்களை இலையிற் போட்டுச் செல்வோரும் மூடசிகாமணிகளில் முதன்மைபெற்றவராவர்.

*           *           *

இக்காலத்தில் சில தனவந்தர்களிடத்தில் பகுத்தறிவு காண்பது அரிதாயிருக்கின்றது. கெட்டதை நல்லதாகவும், நல்லதைக் கெட்டதாகவுமே நினைக்கிறார்கள். ஒரு பிரபு வேடிக்கையின் பொருட்டு வண்டியிலேறி வெளியிற் சென்ற காலத்தில், கல்வியாவது, அறிவாவது, யோக்கியதையாவது இல்லாத ஒரு சமையல்காரனுகிய பார்ப்பாரப் பையனை, அவன் பிராமணன் என்பது குறித்துத் தமக்குப் பக்கத்தில் உட்காரவைத்துக் கொண்டனர். மிகுந்த கல்வி யறிவும், உயர்ந்த புத்திசாலித்தனமும், நல்லொழுக்கமும், உள்ள பிராமணனல்லாத மறறொரு பையனை, தம்முடன் உட்காரவைத்தால் மதிப்புக் குறைவாகுமென்று வண்டிக்குப்பின்னுள் குதிரைக்காரன் நிற்கும் பலகையில் நிற்கவைத்து விட்டார். இவருடைய அறிவை என்னென்றுரைப்பது? உலக்கைக்கொழுந்தென்றுதான் சொல்ல வேண்டும். இப்படிப் பொருளிருந்தும் அறிவில்லாதவர் பலர் இருக்கின்றனர்.

*           *           *

ஒரு பிரபு ஓரிடத்திற்சென்று வனபோஜன முண்ணும்போது இரண்டு புலவர்களும் அவருடனிருந்து சாப்பிட்டார்கள். அங்கே தாகத்திற்கு ஜலம் கொடுப்பதற்கு ஒரே வெள்ளி டம்ளர் மாத்திரமிருந்தது; அது பிரபு மாத்திரம் உபயோகிப்பது. எல்லோரும் சாப்பிடும்போது புலவர்கள் தாகத்திற்கு ஜலம் கேட்டார்கள். சமையல்காரன் வேறுபாத்திர மில்லாதபடியால், பிரபு உபயோகப்படுத்தும் வெள்ளிப் பாத்திரத்திலேயே அவர்களுக்குத்

தண்ணீர் கொடுத்தான். பிரபு, தாம் ஒருவரே வெள்ளிப் பாத்திரத்தில் தண்ணீர் அருந்தக்கூடியவ ரென்னும் தற்பெருமை யுடையவர். ஆகையால் அவர், 'கேவலம் இந்தப் புலவர்களுக்கும் என் வெள்ளிப் பாத்திரத்தில் ஜலம் கொடுத்தாய்?' என்னும் குறிப்புவிளங்க வேலைக்காரனை முறைத்துப் பார்த்தார். அவர் ஒரு தாசியை வைத்திருந்தார்; அவள் அவருக்கு மாத்திரம் உரியவளல்லள்; அவளுக்கு அவரைப்போல் இன்னும் எத்தனையோ நாயகருண்டு. அவள் மாத்திரம் அந்த வெள்ளி டம்ளரில் ஜலம் பருகும்போது அதை வாயில்வைத்துக் குடிப்பாள்; அச்செய்கை பிரபுவுக்கு மிகவும் திருப்தியாயிருக்கும். இந்த இரகசியம் புலவர்களுக்குத் தெரியும்; ஆதலால் அவர், தங்களுக்கு வேலைக்காரன் வெள்ளிப்பாத்திரத்தில் தண்ணீர் கொடுத்ததைக் கண்டு அவர் அவனை முறைத்துப் பார்த்ததை அப்புலவர்கள் உணர்ந்து, "ஐயோ! பொதுமகள் இதை வாயில்வைத்து எச்சிலாக்கித் தண்ணீர்பருகுவது பிரபுவுக்குப் பொருந்தும்; நாங்கள் இதைக் கையினால் தொடுவது பொருந்தாதோ!" என்று மனதிற்குள் எண்ணி அப்பிரபுவின் அவிவேகத்தைப்பற்றி அதிசயித்தார்கள். உலகவாழ்வு அநித்தியமென்று உணர்ந்த அறிஞர்க்கு வெள்ளியும் மண்ணும் சமமென்பதையும், விலைமகளினும் புலவர் உயர்வுடையாரென்பதையும் இப்பிரபு உணரவில்லை. இத்தகைய சீமான்கள் பலர் தமிழ் நாட்டில் இருக்கின்றனர்.

உலக அனுபவஞானி.

## வேலை காலியில்லை! (NO VACANCY)

உத்தியோகம் பெறும் நோக்கத்துடன் விண்ணப்பம், நற்சாக்ஷிப்பத்திரம், முதலியவற்றுடன் பலர் கூட்டங்கூட்டமாய் ஒவ்வொரு ஆபீஸாகச் சுற்றிக்கொண்டே இருக்கிறார்கள், ஒவ்வொரு ஆபீஸ் முன்னிலையிலும் 'வேலை காலியில்லை' (No Vacancy) என்ற போர்டு மாட்டப்பட்டிருக்கிறது. அங்கிருக்கும் சேவகன் இந்த விண்ணப்பக்காரர்கள் சென்றவுடன் 'ஐயா! அந்த போர்டைப் பாருங்கள். கூட்டம் போடாதீர்கள்' என்று பேசுகிறான். பணத்தைக் கொட்டி என்னென்னவோ நினைத்துக்கொண்டு படித்த அவர்கள், அதைப் பார்த்துவிட்டு வெட்கித் திரும்பிப் போய்விடுகிறார்கள். அந்தோ என்ன பரிதாபநிலைமை நம் நாடு எய்திவிட்டது! இதைப்போன்ற வேலையில்லாத் திண்டாட்டம் இங்கிலாந்து போன்ற நாடுகளிலும் உண்டு. அது அங்கு அவ்வளவு மும்மரமாயில்லை. அதற்குக்காரணம் அவர்களுக்கு இந்தியாவிலாவது உத்தியோகமொன்று கிடைக்குமென்ற ஆறுதல் உண்டு! நமக்கோ வைவச்சுத பட்டினந்தான். இது உண்மைதானே!

# ஓர் எச்சரிக்கை.

## திண்டுக்கல் செருப்பு.

திண்டுக்கல் செருப்பு உயர்ந்ததென்று எங்கும் பிரசித்தியா யிருக்கிறது. அதனால் அந்தச் செருப்பைப் பலரும் விரும்புகிறார்கள். விருப்பம் அதிகரிக்குமிடத்தில் ஏமாற்றுத் தொழில் செய்வதே நம் நாட்டிலுள்ள சிலர்க்கு வழக்கமாதலால், திண்டுக்கல்லில் செருப்புத்தைக்கும் சக்கிலியர் போலிச்செருப்பு விற்று ஜனங்களை ஏமாற்றுகிறார்கள்; கனமான கடுதாசி அட்டையைச் செருப்பு வடிவமாக வெட்டி இதன்மேல் துணிபோன்ற மெல்லிய ஆட்டுத்தோலைப் போட்டு மூடித் தையல்வாய் தெரியாமல் தைத்து ஒரே கனத்ததோலில் தைக்கப்பட்ட செருப்பைப்போலச் செய்து திண்டுக்கல் ரெயில்வே ஸ்டேஷனில் கொண்டுவந்து விற்கிறார்கள். அந்தச் செருப்பு ஒன்றரையணு விலைக்குப் பெறாது. இரயிலில் செல்வோர் அந்தப் போலிச் செருப்பைப் பார்த்து அழகாயும், கனமாயு மிருக்கிறதென்று மயங்கி ஒரு ரூபாய், ஒன்றரை ரூபாய் விலை கொடுத்து வாங்கிவிடுகிறார்கள். அவர்கள் இரயிலை விட்டிறங்கி அந்தச் செருப்பைப் போட்டுக்கொண்டு ஒரு பர்லாங்கு தூரம் செல்வதற்குள் மேற்றோல் தேய்ந்து உள்ளேயிருக்கும் கடுதாசி அட்டை பல்லைத்திறந்து காட்டுகிறது. அதைப்பார்த்து அவர்கள் வயிறெரிகிறார்கள். இந்தச் செருப்பு ஏமாற்றம் நெடுங்காலமாகத் திண்டுக்கல் இரயில்வே ஸ்டேஷனில் நடந்துவருகிறது. ஒவ்வொரு வண்டியும் வந்து நிற்கும்போதெல்லாம் பிரயாணிகள் பலர் இந்தப் போலிச் செருப்பை வாங்குகின்றனர். முன் ஏமாந்தவர்கள் பக்கத்திலிருந்து அவர்களைத் தடுத்தாலும் அவர்கள் கேட்பதில்லை. செருப்பின் பளபளப்பைப்பார்த்து மயங்கி அதை வாங்கியே தீருகிறார்கள். பிறர் நல்லது சொன்னாலும் கேட்காமல், தங்கள் மனஞ் சென்றபடியே நடப்பது நம் இந்தியர்களிற் சிலருடைய அருமைக் குணங்களில் ஒன்றல்லவா? அதனால் அவ்வாறு அவர்கள் கேட்காமல் வாங்கிப் பின்னர் உண்மை தெரிந்து வருந்துகிறார்கள்.

இந்தச் சக்கிலியர்களுடைய மோசத்தொழிலை ரெயில்வே அதிகாரிகளாவது, போலீஸ் அதிகாரிகளாவது நீக்கினபாடில்லை. சிற்சில சமயங்களில் போலீஸ்காரர்கள் பிளாட்பாரத்தில் உலவிக்கொண்டு அந்தச் சக்கிலியர்களைத் துரத்துவதை விட்டு, 'நல்ல செருப்பு; வாங்குங்கள், வாங்குங்கள்'' என்று பிரயாணிகளிடம் சொல்லிச் சக்கிலியர் செருப்பு மோசத்துக்குப் பெருத்த உதவி செய்கிறார்கள். இதனால் சக்கிலியர், அந்தப் போலீஸ் தேவதைகளுக்குக் காணிக்கை செலுத்துகிறார்கள் என்பது யூகத்தால் விளங்குகின்றது. ஜனங்களுக்கு நன்மைசெய்ய ஏற்பட்ட இத்தெய்வங்கள் சக்கிலியர் வசப்பட்டிருப்பது அதிசயிக்கத்தக்கது. இச்செயல்களை நான் பன்முறை நேரில் பார்த்திருக்கிறேன்.

ஆதலின், நண்பர்களே! நீங்கள் திண்டுக்கல் ஸ்டேஷனில் செருப்பு வாங்கி ஏமாந்துபோகாமல் ஜாக்கிரதையா யிருந்துகொள்ளுங்கள். அதிகாரிகள் இவ்விஷயங்களில் கவனஞ் செலுத்துவார்களென்பது நம்பிக்கையற்ற விஷயம்; நமக்கு நாமே சௌகரியம் தேடிக்கொள்ளவேண்டும்.

ஓர் புகைவண்டிப் பிரயாணி.




## சில அநுபோக முறைகள்.

**செவிடு நீங்க:**—தினந்தோறும் காலையிலும் இரவிலும் பிக்கரெல் என்ற தைலத்தை நந்நான்கு துளிகள் காதில் ஊற்றிவந்தால் செவிடு நீங்கிக் குணமாகும். தைலம் சுத்தமாக இருக்கவேண்டும்.

**கத்துவாய் இருமலுக்கு:**—முதலைக்கறியின் உப்புக்கண்டத்தை நன்றாய்ப் பொடிசெய்து எண்ணெய் அல்லது நெய்யில் வறுக்கிக் கொடுக்க குணமாகும். அல்லது மூள் எலியின் தோலைப் பசுவெண்ணெயில் வதக்கி நன்றாய்க் குழைத்துக் காலை மாலை கொடுக்கக் குணமாகும்.

**பாம்புக்கடி:**—பாம்பு கடித்தவுடனே கடிவாயில் டர்பென்டைன் என்ற தைலத்தை வைக்க 15 நிமிஷத்தில் குணமாகும். அல்லது இரும்புக் கம்பியைச் சிவக்கக் காய்ச்சிக் கடிவாயில்வைத்து பொட்டாஸியம் பர்மாங்கனேட்டை வைத்தால் குணப்படும்.

**பூஞ்சாளம்** (Ringworm) இந்நோய் தலையில் வந்தவுடன் மயிரைக் கத்தரித்துவிட்டு கார்பாலிக் சோப்பினால் தலையை நன்கு அலம்பி சீனிக்காரம் வைத்தால் குணமாகும். எழுதும் மைக்கும் குணமாகும்.

**தேள்கடி:**—தேள் கொட்டின உடனே சிறிய வேப்பங்கொட்டையளவு மயில் துத்தம் எடுத்து நெருப்பின்மீது வைத்தால் பச்சைநிறம் மாறி வெண்ணிறமாகப் பூக்கும். அதை எடுத்துக் கடிவாயில் வைத்துச் சிறிது வெற்றிலைச்சாற்றை விடவேண்டும். சிறிது நேரத்துக்குள் விஷம் இறங்கி வருத்தம் நீங்கிவிடும். நட்டுவாக்காலிக்கு வெற்றிலைச் சாற்றுக்குப் பதில் எருக்கம் பால் விடவேண்டும்.

பண்டித. இராமாநுஜ நாயுடு.

**வாந்தி பேதியைத் தடுக்க:**—இந்தக் கொடிய நோய்க்கு உடனே கொடாத மருந்தும் சிகிச்சையும் பிரயோஜன மில்லையென்பது அநுபவம். தாகம் அடக்கத் தண்ணீர் கொடாதவர் நோயாளிக்கு விரோதியென்று சொல்லலாம். வேப்பிலையும் ஓமமும் கருக்கிட்டுக் கொடுக்கலாம். மஞ்சளும் சுண்ணாம்பும் சுருக்கிட்டுக் கொடுக்கலாம்.

சூடமும் சாம்பிராணியும் வகைக்கு $\frac{1}{4}$-பலம், லிங்கம் விராகனெடை 1, 3-ம் தேன்விட்டரைத்து அடிக்கடி தேனில் கொடுக்கலாம். துப்பாக்கி மருந்தை 2-அரிசி எடை வீதம் தேனில் கொடுக்கலாம். சூடபதங்கத்தைத் தேனில் கொடுக்கலாம். வெடியுப்பு, வெங்காரம், நவச்சாரம் 3-ம் அரைத்து வயிற்றில் தடவினால் நீரைப்பிரிக்கும். பார்லியரிசித் தண்ணீர் நீரைப் பிரிக்கும். காயம், வசம்பு, சுட்டகரி, ஓமம், மிளகு வகைக்குபலம் $\frac{1}{2}$, அபின் விராகனெடை 1-ம் சேர்த்துத் தேனில் அரைத்து அடிக்கடி தேனில் கொடுக்கலாம். சூடம் பலம் 1, ஓம உப்பு பலம் $\frac{1}{2}$, பொதினா உப்பு விராகனெடை 1. 3-ம் பொடித்து சீசாவில்வைத்தால் உருகித்தைலமாகும்: ஒருசேர் தண்ணீரில் 10-துளிவிட்டு குலுக்கி வைத்துக்கொண்டு $\frac{1}{2}$-மணிக்கு $\frac{1}{2}$-அவுன்சு கொடுக்கலாம். கலியாண முருங்கப்பட்டையை அரைத்துக் கால் பெருவிரலில் கட்டினால் கெண்டை ஏறுதலை நிறுத்தும்.

ஜீ. கண்ணுசாமி பிள்ளை.

# ஜேம்ஸ் ஆலனின் அருள் மொழிகள்.

1. எதனை எதனை எந்தெந்த நேரத்திற் செய்ய வேண்டுமோ அதனை அதனை அந்தந்த நேரத்தில் உன் முழு மனதோடும் செய்து முடி.

2. எதிலும் உன் மனதை அரைகுறையாகச் செலுத்தாதே.

3. எதனையும் அரை குறையாகச் செய்யாதே.

4. எதனைச் செய்யினும் திருத்தமாகவும் பூர்த்தியாகவும் செய்.

5. மனிதனது ஏகாக்ரசித்தமே அவனடையும் உன்னத பதவிகளுக்கெல்லாம் அடிப்படையாகும்.

6. உண்ணல், உறங்கல், படித்தல், விளையாடல் முதலிய சகல செயல்களையும் கிரமமாகவும் ஒழுங்காகவும் செய்து முடி.

7. அதிகம் கஷ்டப்பட்டு வேலை செய்தல் அநேகம் பாஷைகளைக் கற்பதோடொக்கும்.

8. இவ்வுலகில் மனிதர் அநுபவிக்கும் இன்பங்களே சுவர்க்க மென்பதும், துன்பங்களே நரக மென்பதுமே எனது துணிவு,

9. எக்காலத்தும் ஒழுக்கத்தை ஓர் ஆபரணமாகக் கொண்டிரு.

10. புலாலுண்ணல், மது வுண்ணல், அந்நிய ஸ்திரீகளுடன் உலாவச் செல்லல் முதலிய கெட்ட பழக்கங்களை ஒருபோதும் கைக்கொள்ளாதே.

11. உன் வாக்கினின்று வரும் ஒவ்வொரு வார்த்தையும் பொருள் நிறைந்ததாயும் இன்பம் பயப்பதாயும் இருக்கட்டும்,

12. கீழ் நாட்டாரே மெய்ஞானக் கருவூலம்.

13. ஒழுக்கம் ஒன்றே மெய்யுணர்வுக்கும் இதர உயர் பதவிகட்கும் மார்க்கம்.

14. எஞ்ஞான்றும் ஒழுக்கத்தை உன் உயிரினும் அதிகமாய் ஓம்பி வருவாயாக.

15. காலை மூன்று மணிக்கு எழுந்திருந்து கடவுளைத் தியானம் செய்,

16. குன்றுகளின்மீது தனித்துச்சென்று ஆன்ம தத்துவங்களைப் பற்றிச் சிந்தனை செய்.

17. மனிதனது புற நிலைமைகளெல்லாம் அவனது அக நிலைமைகளிலிருந்தே வருகின்றன. புற நிலைமைகளைத் திருத்த வேண்டுமேல் முதலில் அக நிலைமைகளைத் திருத்த வேண்டும்.

18. உன் சரீர ஆரோக்கியம் குன்றிய காலத்தும் கடவுள் தியானத்தையும், பரோபகார வேலையையும் நிறுத்தாதே. குறைக்காதே.

19. வேலை செய்வதற்காகவே யான் உடலோடு கூடிப் பிறந்தேன். வேலை செய்வதற்காகவே யான் உடலோடு கூடி வாழ்கின்றேன். என் வேலை முடிந்தவுடனே இவ்வுடலை யான் விட்டுவிடுவேன். நீங்கள் என் வேலையைத் தடுக்கவேண்டாம்.

A. சுருளியாண்டி கௌட.

---




## கிருஷ்ணவிங் அல்லது துப்பறியும் சீடன்.

(108-ம் பக்கத் தொடர்ச்சி.)

**தந்தை:—**ஆம். நீ கூறுவது உண்மையே. எப்போது ஒரு இலட்சாதிகாரியின் மனைவியும் அவர்கள் புத்திரியும் ஒன்றுசேர்ந்து ஒரு விவகாரத்தை யிரகசியமாய்ச் செய்கிறார்களோ அதில் ஆழ்ந்த மர்மம் இருக்கிறதென்பது நிச்சயம். இப்போது களவாடப்பட்ட தொகை கடைசியல்ல. இது தான் ஆரம்பம்.

பொழுதும் அமரும் சமயம் ஆய்விட்டது. எங்கும் இருள் சூழ்ந்துகொண்டது. அப்படியிருந்தும், ஆனந்தவிங் போஜனம்கூடச் செய்யாமலே தன் பெண் வேடத்தைக் கழற்றிவிட்டுத் தன் தந்தைபோல் உருமாறி தன் தந்தையை நோக்கி "அப்பா! இப்போது அக்குள்ளனை யழைத்துக்கொண்டு போய்விட்டால் எனக்குப் பெரிய உதவியாயிருக்கும்" என்றான்.

கிருஷ்ணவிங் வெளியில் சென்றதே ஆனந்தவிங் அக்குள்ளனைக் காண முடியாவிட்டாலும், அவன்பின் தொடர்ந்தாலன்றி தன் தந்தை நெடுந்தூரம் செல்லமாட்டார் என்று அவன் அறிவான் ஆதலால் அவர் சென்ற பத்து நிமிடங்கள் கழித்து வீட்டைவிட்டுப் புறப்பட்டு நேராய் இராஜவேல் வசிக்கும் வீட்டை நோக்கிச் சென்றான். அது பிரம்மச்சாரிகள் வசிக்கும் ஒரு பழைய வீடு. இராஜவேல் இரண்டாவது மாடியில் வசித்துக் கொண்டிருந்தான்.

ஆனந்தவிங் மேலேறிச் சென்று இராஜவேலின் அறைக் கதவைத் தட்டினான். யாரும் பதில் கூறவில்லை. "சரி இந்த இருண்ட கூடத்தில் சற்று உட்கார்ந்து காலாற்றிக்கொண்டு அவனை யெதிர்பார்ப்போம். உள்ளே செல்வோம். ஒரு சமயம் அவனுக்கு அது பிரியமில்லாதிருந்தாலும் இருக்கலாம். இருக்கட்டும் அவ்வளவுதான். உள்ளே செல்வோம்" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டே, தன்னிடமிருந்த கள்ளச்சாவிகளில் ஒன்றினால் அறையைத் திறந்து உட்சென்று தன்னிடமிருந்த தீக்குச்சியால் அங்கிருந்த தீபத்தை யேற்றியதோடு குளிர்காயும் நெகிடியையும் கொளுத்திவிட்டான்.

அந்த வீடு நன்றாய் அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. ஆனந்தவிங் அதைப்பார்த்துக் கொண்டே "இந்த வேலைக்கு மூடனைப்போல் நடந்து கொள்ளவும் கள்ளனைப்போல் பூட்டுகளைத் திறக்கவும் தெரிந்திருப்பது மிக்க நலம். இது வாலியன் உட்கார்ந்திருக்கும் அறைபோலிருக்கிறது" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டே அங்கிருந்த அலமாரி பீரோ மேஜை யாவற்றையும் திறந்து சோதனை செய்தான்.

(தொடரும்) ஆரணி. குப்புசாமி முதலியார்.




# சிறு வேடிக்கைக் கதைகள்.

## விருந்தாடி வந்தவனை பருந்தாட்டமாடினது.

ஒரு சிற்றூரில் ஓர் ஐயங்கார் பிராமணர் வசித்து வந்தார். ஐயங்கார் நல்ல குணமுள்ளவர். பலராலும் நன்கு மதிக்கப்பட்டவர். ஆனால் அவரிடத்தில் அவர் மனைவி கிஞ்சித்தேனும் மதிப்பு வைப்பதில்லை. ஐயங்காருக்கு அவளிடத்தில் வாஸ்தவமான பீதியிருந்தது. சுருங்கச் சொல்லுமிடத்து மனைவிக்கு அவர் அடங்கியவரே.

நமது ஐயங்காருக்குப் பருப்புத் துவையல் என்றால் வெகு ப்ரீதி. ஒவ்வொரு நாளும் அவர் துவையல் இன்றி போஜனம் அருந்தார். நிற்க ஓர் நாள் சாயங்காலம் ஐயங்காரகத்திற்குப் புதிதாக ஓர் விருந்தாளி வந்தார். வந்தவர் பரமசாது. விருந்தினரை ஐயங்கார் யோக க்ஷேமங்களைப்பற்றி உசாவிய பின் போஜனத்திற்கழைத்தார். முன்னமே ஐயங்கார் சொற்படி அவர் மனைவி போஜனம் தயாரித்து அவர்களிருவரையும் அழைத்து வந்து போஜனம் பரிமாற, இருவரும் அருந்த ஆரம்பித்தனர். ஐயங்கார் போஜனமருந்திக்கொண்டு இடையிடையே துவையல் வைக்கும்படி வற்புறுத்த அவர் மனைவியும் வைத்துக்கொண்டு வந்தாள். இவர் இப்படிப் பலமுறை கேட்டு அவள் வைத்துக் கொண்டு வந்ததினால் துவையல் முழுதும் காலியானதினாலும், ஐயங்கார் தன் பக்கத்தில் ஒருவர் இருப்பதினால் கம்பீரமாக அவளைப் பல முறை கேட்டதினாலும் அவர் மனைவிக்கு அடக்கொணாக் கோபம் பிறந்துவிட்டது. இருந்தாலும் புதிதாக ஒருவர் வந்திருப்பதினால் மிகுந்த கஷ்டத்தோடு தன் கோபத்தை அடக்கிக்கொண்டு இரண்டு செம்பில் ஜலமெடுத்து ஒன்றைத் தோட்டத்திலும் மற்றொன்றைத் தெருவிலும் வைத்து விட்டுத் தன் புருஷனுக்குத் தோட்டத்திலும் புதிதாக வந்தவருக்குத் தெருவிலும் வைத்திருப்பதாகத் தெரிவித்தாள். இவள் சொல்லிய கருத்தை ஐயங்கார் உடனே உணர்ந்து மற்றவரைக் கூப்பிட்டு அவரைத் தோட்டத்திற்குப் போகும்படி சொல்லிவிட்டுத் தான் தெருவுக்குச் சென்றார். ஐயங்கார் மனைவி தான் சொல்லிவிட்டுத் தோட்டம் சென்றதால் இவர்கள் பேசினதை அவள் அறிந்தாளில்லை. நிற்க விருந்தாளி ஐயங்கார் சொற்படி தோட்டத்திற்குப் போய் கை அலம்பிக் கொண்டிருந்தார். அப்போது கிருஷ்ணபக்ஷமாகையால் எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. இதற்குள் ஐயங்கார் மனைவி மிகுந்த சீற்றத்துடன் மேற்படி அய்யரைப் பார்த்துத் தன் புருஷன் என எண்ணி மிகுந்த அகங்காரத்தோடு அவரது கன்னத்தைப் பிடித்து இரண்டு கையாலும் திருக ஆரம்பித்து துவையல் கேட்க அவ்வளவு துணிவா! இனி அப்

படி கேளாதே! கேளாதே!! என்று பலமாய்த் திருகினுள். வந்தவர் சாது வானதால் எதிர்பாரா இந்த சம்பவத்தைக் கண்டு திடுக்கிட்டார். திருக லின் உபத்ரவத்தைத் தாங்காமல் அலறுகிறார். கூக்குரலிடுகிறார். இவளும் விடாமல் பல வசவு மொழிகளை உபயோகித்து இம்சித்ததினுல் இவரது கூக் குரல் அதிகமாக, அயல் வீட்டிலுள்ள ஜனங்கள் எல்லோரும் தோட்டம் சென்று நடந்த விபரம் உணர்ந்து வயிறுபுண்பட நகைத்தனர். ஐயங்கார் மனைவி பெரிதும் வெட்கினள். புதிதாக வந்தவர் தனது கன்னத்தின் உபத் திரவத்தோடு ஊர்போய்ச் சேர்ந்தார்.

## பூவுலக ஆராதனை மேலுலகம் செல்வதெங்ஙனம்?

ஓர் ஆற்றங்கரையின் ஓரத்தில் குடியானவனொருவனுடைய பிதுர் கரு மங்களை நடத்தும் நிமித்தம் பிராமணனொருவன் எக்கியம் வளர்த்தி பிண்டங் கள் பிடித்து வைத்து அவைகளுக்கு ஆராதனைகள் நடத்திக்கொண்டிருந் தான். அப்போது அவ்வழியே சென்று கொண்டிருந்த விகடனொருவன் மேற்படி ஐயரைப் பார்த்து வணங்கிக் கும்பிட்டு சுவாமி! தாங்கள் செய்யும் இந்தப் பூசையின் அர்த்தமென்ன? தங்கள் பக்கத்திலிருக்கும் ஐயா தாங்கள் சொல்லும் வண்ணம் செய்கிறாரே அதன் தாற்பரியமென்ன? இவைகளை அடியேனுக்குச் சிறிது விளங்க உரைக்கவேண்டும் என்றான்.

ஐயர் அடே! நான் செய்யும் இந்தப் பூசைகள் இந்தக் குடியானவன் தகப்பன் பாட்டன் இரண்டாம் பாட்டன் மூன்றும் பாட்டன் இப்படி இவ னுடைய 27 தலைமுறைக்கும் 'அவர்கள் நரகத்திலிருந்தாலும் சுவர்க்கத்தி லிருந்தாலும் போய்ச் சேர்வனவாகும் என்றார்.

இதைக் கேட்ட விகடன் சுவாமி தாங்கள் இந்தப் பிண்டங்களுக்கு இவ்வுலகத்திலிருந்து பூசை செய்தால் அவைகள் சுவர்க்க நரகலோகங்களுக் குப் போய்ச் சேருகின்றனவா? என்றான். ஐயர் ஆம் என்றார்.

உடனே விகடன் ஆற்றில் ஓடிக்கொண்டிருந்த ஜலத்தை அள்ளி அள் ளிப்பக்கத்தில் இறைக்கலானுன். இதைக்கண்ட ஐயர் அடே வெறும் மண லுக்கு என் விருதாவில் ஜலம் இறைக்கிறாய்? என்றார். விகடன் சுவாமி! நான் பிரயோஜனமில்லாமல் இறைக்கவில்லை; இங்கிருந்து 30 மைல் தூரத்தி லுள்ள எனது புகையிலைத் தோட்டத்திற்குத் தண்ணீர் இறைக்கிறேன் என்றான். உடனே ஐயரும் குடியானவனும் கலீரென்று நகைத்து அடே பைத்தியகாரா! 30 மைல் தூரத்திலுள்ள இடத்திற்கு எப்படித் தண்ணீர் பாயும்? என்றார்.

விகடன், சுவாமி! இந்த உலகத்தில் செய்யும் ஆராதனையானது இந்த உலகத்தையே தாண்டி விண்ணுலகம் போய் உரியவர்களுக்குச்சேரும் போது, இந்த உலகத்திலேயே சிறிது தூரத்திலிருக்கும் எனது புகையிலைத் தோட்டத்திற்கு இங்கிருந்து தண்ணீர் பாய்வது மிகச் சுலபம்; இது பைத் தியக்காரத்தனம் அல்ல என்றான். ஐயர் வெட்கத்தால் மௌனியானார்.

C. மெய்கண்டன்.

# மதிப்புரை.

**கள்ளர் சரித்திரம்:**—(இரண்டாம் பதிப்பு)—[திருச்சிராப்பள்ளி பிஷப் ஹீபர் காலேஜ் தலைமைத் தமிழாசிரியராகிய நடுக்காவேரி - திருவாளர் மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் எழுதியது; சென்னை மேரி மகாராணி காலேஜ் தமிழாசிரியையாகிய திரு. பொன்னம்மாள் B. A., அவர்களால் வெளியிடப் பெற்றது. இதன் விலை ரூ. 1—4—0] இந்நூல், திருவாளர் - மு. வேங்கடசாமி நாட்டாரவர்களால் நம் பார்வைக் கனுப்பப் பட்டுளது. இந்நூல் முழுவதையும் நாம் படித்துப் பார்த்தோம். இது, பெரும்பான்மையும் கள்ளர் என்னும் சிறப்புற்ற ஒரு வகுப்பினரின் வரலாற்றினை விளக்க வெளிப்போந்த தெனினும், அதன் சார்பாக இன்னும் பல அரிய பெரிய பொருள்களின் ஆராய்ச்சி முடிபுகளையெல்லாம் விளக்கும் பெற்றியினதாய்த் திகழ்கின்றது. இதில், தமிழ் நாட்டின் முற்கால பிற்கால இயற்கைகள், நிலப்பிரிவுகள், அந்த அந்த நிலங்கட்குரிய மக்கட் பிரிவுகள், அவர்களின் இயற்கைகள், பண்டைக்காலத்துத் தமிழ் மக்களின் வரலாறு, நாகர், பல்லவர், திராவிடர், ஆரியர் ஆகியவர்களின் வரலாறுகள், திராவிடர், தமிழர் என்ற சொற்களின் ஆராய்ச்சி முடிபுகள், நாகருக்கும், பல்லவருக்கும், சோழருக்கும், கள்ளருக்குமுள்ள சம்பந்தம், பல்லவரே கள்ளரென்பது, சோழர் கள்ளரே யென்பது, தொண்டைமான் வரலாறு, தொண்டைமான் என்ற பெயர் கள்ளர்க்கே உரியதென்பது, முத்தரையர் என்பார் கள்ளரே என்பது, தமிழ்நாட்டு மூவேந்தரின் வரலாறுகள், கள்ளர் என்ற பெயர்ப் பொருள் விளக்கம், கள்ளர் குறுநில மன்னராயும், நாடாள்வாராயு மிருந்ததற்குரிய ஆதாரங்கள், கள்ளர்க்கும் பாண்டியர்க்கு முள்ள தொடர்பு, புதுக்கோட்டை அரசரின் வரலாறு, குறுநில மன்னரின் வரலாறு, கள்ளர், மறவர், அகம்படியர் என்ற மூன்று வகுப்பினர்க்கு முள்ள தொடர்பு, இம்மூன்று வகுப்பினர்க்கும், தமிழ் நாட்டு வேந்தர்களாகிய சேர, சோழ, பாண்டியர்கட்கு முள்ள தொடர்பு, கள்ளர், மறவர், அகம்படியர் என்பார் இந்திரகுலத்தவ ரென்பது, அதற்குரிய ஆதாரங்கள், கள்ளர்களின் வீரச்செயல்கள், இவர்கள் பாண்டியர் முதலியவர்கட்கும் ஆங்கிலேயருக்கும் செய்த உதவிகள், இவர்களால் செய்யப்பட்ட தான தருமங்கள், இவர்களின் முற்கால பிற்கால நிலைமைகள், சோழநாட்டுக் கள்ளர் கூட்ட வரலாறு, பாண்டிநாட்டுக் கள்ளர் கூட்ட வரலாறு, சோழநாட்டிலுள்ள கள்ளர்நாடுகள், கிராமங்கள் முதலியவற்றின் தொகைகள், பாண்டி நாட்டிலுள்ள கள்ளர் நாடுகள், ஊர்கள் முதலியவற்றின் தொகைகள், கள்ளர்க் குரிய — எண்ணிக்கையில் மிகைப்பட்ட உயர்தரப் பட்டப் பெயர்கள், சிவனடியார்க ளுள்ளும் ஆழ்வார்களுள்ளும் புலவர்களுள்ளும் பலர் கள்ளர் வகுப்பினரே யென்பது முதலியனவும், பிறவும் நுணுகிய ஆராய்ச்சியைக் கொண்டு, புராணங்களிலும், இதிகாசங்களிலும், சிந்தாமணி, மணிமேகலை, புறநானூறு, அகநானூறு, பெரும்பாணாற்றுப் படை முதலிய சங்கநூல்களிலும், மேல்நாட்டாரின் சரித்திர ஆராய்ச்சிக் குறிப்புக்களிலும், நம் நாட்டுச் சரித்திர ஆசிரியர்களின் குறிப்புக்களிலும், கல்வெட்டுக்களிலும், செப்பேடுகளிலும் உள்ள உதாரணங்களுடனும், ஆதரவுகளுடனும் செவ்விதில் எடுத்து விளக்கிக் காட்டப் பட்டிருக்கின்றன. முன் மேம்பட்டிருந்த கள்ளர் இக்காலத்தில், தங்கள் நிலை குன்றியிருப்பதும், அதற்குச் செய்யத்தக்க சீர்திருத்தங்களும் ஈற்றில் கூறப்பட்டிருக்கின்றன; கள்

ளர் வகுப்பாரின் ஜனத்தொகையும் காட்டப்பட்டிருக்கின்றது. கள்ளர்க்குரிய பட்டப்பெயர்களில் இப்போது கிடைத்தவரையில் 348. பெயர்கள் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. இப்பெயர்களே கள்ளர்களின் பெருஞ்சீர்த்தியை விளக்கத் தக்கனவாம். இவ்வகுப்பினரின் உண்மைநிலை இங்ஙனமிருப்ப, கல்வியறிவில்லாத சிலர், கள்ளர், மறவர், அகம்படியர் என்ற மூன்று வகுப்பினரையும் சில நூல்களில் இழித்துக் கூறி யிருக்கின்றனர். அன்னார்க் கறிவுறுத்தவும், மற்றையர்க்கும் கள்ளர் முதலிய மூன்று வகுப்பினரின் இயற்கை உயர்வை விளக்கிக் காட்டுதற்கும், இந்நூல் இன்றியமையாததாகும். திருவாளர்-நாட்டாரவர்கள் தமிழ்ப்புலமையிற் சிறந்திருத்தலோடு, சரித்திர ஆராய்ச்சித் துறையிலும் பேராற்றல் படைத்தலைவர்களென்பதை விளக்க இந்நூலொன்றே போதியசான்றாகும். இந்நூலில் இவர்கள் எடுத்துக்கொண்ட உழைப்பு அறிஞர் பலரும் போற்றத்தக்கதாகும். இந்நூல் கள்ளர் வரலாற்றினைக் கூறுவதெனினும் தமிழர் எல்லோர்க்குமே பயன்படத்தக்க பல ஆராய்ச்சிக் குறிப்புக்களோடு கூடியதா யிருத்தலின், கள்ளர்க்கேயன்றி மற்றையர்க்கும் பெரிதும் பயனளிக்குமென்பது எமது துணிபு. இது, கலாசாலை மாணவர்க்கும் பாடமாக வைக்கத் தகுந்தது.

***

திருமண வினை விளக்கம்:—தமிழகத்தில் சின்னாட்களாய்ச் "சுயமரியாதை"க் கிளர்ச்சியின் பயனாகப் பார்ப்பனப் புரோகிதம் ஒழிந்த சுபாசுப வினைகள் ஆங்காங்கு நிகழ்ந்து வருதல் சில பத்திரிகைகள் வாயிலாக உணர்ந்து வருகிறோம். ஆனால் இக்காரியங்களை நடத்தும் ஆசிரியர் பார்ப்பன ரல்லாதாரா யிருந்தபோதிலும் வடமொழி மந்திரங்களையும் பழைய முறையையும்தான் பின்பற்றுகின்றனர். இது பெரிதும் முரண்பாடான விஷயம் என்று கருதிய சைவ அன்பர் ஒருவர் தமிழ் மொழியில் திருமுறை மேற்கோள்களை இடையிடையே பெய்து "திருமண வினை விளக்கம்" என்ற பேரால் "செந்தமிழ்ச் செல்வி" யில் எழுதி வெளியிட்டதை திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் 16 பக்கங்கொண்ட சிறுநூலாக வெளியிட்டிருக்கிறார்கள். சைவ நன்மக்கள் ஆதரிப்பாராக.

விலை அணா 2.

***

வாராந்தம் :— தஞ்சை தேசபக்தர் திருவாளர் - நா. நடராஜபிள்ளையவர்களை ஆசிரியராகக் கொண்டு நடைபெற்றுவரும் "வாராந்தம்" என்னும் வாரப்பத்திரிகையை வரவேற்கிறோம். திரு. பிள்ளையவர்கள் தேசத்துக்காக சிறை சென்றவர். இளைஞர்களைத் தட்டி எழுப்பும் வீர உணர்ச்சி உள்ளவர். பத்திரிகாநுபவம் வாய்ந்தவர். ஆதலால் சமரஸம், நீதி, சத்தியம் முதலியவற்றைக் கொள்கையாகக் கொண்டுள்ள "வாராந்தத்"தை ஆதரிக்குமாறு எல்லாத் தமிழ்மக்களையும் வேண்டுகிறோம்.

வருட சந்தா ரூ. 4—0—0

மானேஜர்,
"வாராந்தம்"
பிராட்வே, சென்னை.

---

## ஓயாச்சிரிப்பு.

14-8-28-க்குள் "ஆனந்தபோதினி" சந்தாத் தொகையை மணியார்டர் மூலம் அனுப்பி விடுபவர்கட்கு நமது ஓயாச்சிரிப்பு என்னும் துவுட்டுச் சிரிப்புக் கதைகள் இனும் அளிப்பதாகத் தெரிவித்திருந்தபடி எல்லாருக்கும் அனுப்பப்பெற்றன. என்பதை அறிவித்துக் கொள்ளுகிறோம். ப-ர்.



# வர்த்தமானப்பகுதி

**கடல் பொங்கிற்று:**—தென் திருவாங்கூரில் செய்யாற்றங்கரைக் கருகிலுள்ள புவாருக்குச் சமீபத்தில் கடல் பொங்கி 6-மைல் தூரம் உள் நாட்டிற்குள் வந்து பூமியை ஜலத்தில் மூழ்கச்செய்து விட்டதாயும் இதனல் பல வீடுகளும், தென்னை மரஙகளும் அழிந்து போனதாகவும் செய்தி கிடைத்திருக்கிறது.

**ஒரு பெரியாரின் மரணம்:**—தென்னிந்தியாவில் கியாதிபெற்ற வேலூர் மௌலானா மௌலவி குலாம் முகய்யதீன் ஹஜரத்மர்ஹூம் அவர்களின் மாமியாரும், சென்னை "சைபுல் இஸ்லாம்" பத்திராதிபர் மௌலானா மௌலவி அகம்மது சயீது சாயபு அவர்களின் தாயாரும் ஆகிய ரஹீமா பீவீ அவர்கள் தமது சுமார் 110-வது வயதில் 12-8-29 தேதி காலஞ்சென்று விட்டதாக ஒருநிருபர் அறிவிக்கிறார்.

**ஸ்ரீ வைஷ்ணவ வித்வத் ஸபையின் விவரணம்.** பெருமாள் கோயில [காஞ்சீபுரம்] பிரதிவாதி பயங்கர மடாதிபதி-ஸ்ரீமதநந்தாசார்ய ஸ்வாமிகளின் முயற்சியால் ஷை சபை காஞ்சீபுரத்தில் விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயத்தில் வாதப்ரதிவாதரீதியில் கோடிக்ரமங்கள் சொல்லி மதாந்தரங்களைக் கண்டித்து ஸித்தாந்த ஸ்தாபனம் செய்யக்கூடிய வித்வான்களை அபிவிருத்தி செய்ய ஆரம்பிக்கப்பட்ட இந்த வித்வத்ஸபை சென்ற ஆடிமீ 26உ முதலாக ஆறு நாட்களிலும் இடையூறின்றி நடைபெற்றது. வந்திருந்தவர்களுள் முக்கியமானவர்கள் 1. ஸ்ரீ. உ. வே. மஹாமஹோபாத்யாய லக்ஷ்மீபுரம் ஸ்ரீனிவாஸாசாரியர் மைசூர். 2. தேவசிகாமணி ராமானுஜாசாரியர் திருநாராயணபுரம். 3. நக்கிப்பள்ளி திருமலாசாரியர் பெங்களூர். 4. ஸ்ரீநிவாஸாசாரியர் பெங்களூர். 5. தி. அ. அய்யனய்யங்கார் மைசூர். 6. தேசி வரதாசாரியர் சென்னை. 7. பஹுகுடும்பி வரதாசாரியர் திருவல்லிக்கேணி. 8. திருமங்கலம் நரஸிம்மாசாரியர் திருவல்லிக்கேணி. 9. விளக்குடி ஸ்ரீனிவாஸாசாரியர் மயிலாப்பூர். 10. தி. அ. பு. கிருஷ்ணமாசாரியர் திருப்பதி 11. உத்தமசேரி ரங்கசாமி அய்யங்கார் ஸ்ரீரங்கம். 12. இஞ்சிமேடு ரங்கநாதாசாரியர் காஞ்சீ. 13. இளங்காடு ரங்காசாரியர் காஞ்சீ. 14. அய்யாகிருஷ்ணசாமி தாதாசாரியர் காஞ்சீ. 15 மு. அ. திருவேங்கடாசாரியர் காஞ்சீ. 16. பு. திருவேங்கடாசாரியர் காஞ்சீ. 17. காண்டூர் பாஷ்யகாராசாரியர் காஞ்சீ.

வித்வான்களுக்கே உரிய வாதகோஷ்டி, ஸர்வஜனங்களுக்கும் உபயுக்தமாம்படி தர்ம ஸம்பந்தமான உபந்யாஸங்கள் ஆறுநாளும் அழகாக நடந்தன. இரண்டாநாளில் சென்னை ஸ்ரீமான் உ. வே. வி. வி. ஸ்ரீனிவாஸய்யங்கார் B.A., B.L. ஷை சபைக்கு வந்திருந்து ஸ்ரீஸ்வாமிகளின் அரிய பெரிய அமுதமொழிகளைப் பருகி, தாமும் அருமையான சில அபிப்பிராயங்களை வெளியிட்டார். மறுநாள் ஸ்ரீமான் உ. வே. திவான் பஹதூர் டி. ரங்காசாரியரும் ஸ்ரீமான் ஆநந்தா பிரஸ் தலைவர் ராவ்பஹதூர் வேலூர் ரங்கநாதம் செட்டியாரும் ஸபைக்கு விஜயம் செய்திருந்தனர். ஸபை முடியும் தினத்தில் கீர்த்திபெற்ற நேபாள ராஜாவின் தலைமை மந்திரி பெங்களூரிலிருந்து விஜயம் செய்திருந்து சபையிற் கலந்து களித்துச் சென்றனர்.

இங்ஙனம்:

ப்ர. அண்ணங்கரார்யதாஸன்,

(ஸ்ரீஸ்வாமிகளின் திருவடி.)

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## விபவஹு ஐப்பசிமீ—கலியுகாதி 5030, சாலிவாகனம் 1851, பசலி 1338—கோல்லமாண்டு 1104—ஹிஜரி 1347 இங்கிலீஷ் 1928ஹு அக்டோபர்மீ—நவம்பர்மீ

| ஐப்பசிமீ | அக்டோபர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | புத | சது60 | அனு45-48 | சித்60 | துலாஸ்நானாரம்பம் |
| 2 | 18 | வியா | சது1-13 | கேட்53-45 | பி53-45சி | லலிதா பஞ்சமி [ரம்பம் |
| 3 | 19 | வெ | பஞ்7-53 | மூல60 | அமி60 | சஷ்டி, சரஸ்வதிபூஜை ஆ |
| 4 | 20 | சனி | சஷ்14-8 | மூல1-18 | சித்60 | சரஸ்வதி ஆவாகனம் |
| 5 | 21 | ஞா | சப்19-18 | பூரா7-53 | சித்7-53அ | கணிதாரம்பம்,கடன்தீர்க் |
| 6 | 22 | திங் | அ22-45 | உத்13-3 | மர13·3அ | மஹாநவமி, ஸரஸ்வதி பூஜை, ஆயுத பூஜை |
| 7 | 23 | செவ் | நவ24-30 | திரு16-28 | சித்60 | விஜய தசமி, ஸரஸ்வதி பூஜை (சில விடங்களில்) |
| 8 | 24 | புத | தச24-3 | அவி17-50 | பி17-50சி | துவிதல விரதாரம்பம் |
| 9 | 25 | வியா | ஏகா21-25 | சதை17-10 | ம17-10சி | சர்வமத்வ ஏகாதசி |
| 10 | 26 | வெ | து16-53 | பூரட்14-33 | சித்60 | பிரதோஷம், அவமாகம் |
| 11 | 27 | சனி | திர10-45 | உத்10-18 | சி10-18ம | கதிரறுக்க, விதைவிதைக் |
| 12 | 28 | ஞா | சது3-28<br>○ 55-20 | ரேவ4-48<br>அஸ்58-30 | அ4-48சி | பௌர்ணமி, அவமாகம், அன்னபிஷேகம் |
| 13 | 29 | திங் | பிர46-38 | பரணி51-40 | சி51-40ம | |
| 14 | 30 | செவ் | துதி37-53 | கிரு·✕·44-50 | சி44-50அ | |
| 15 | 31 | புத | திரி29-28 | ரோ38-25 | சித்60 | |
| 16 | 1 | வியா | சது21-45 | மிரு32-43 | மர60 | |
| 17 | 2 | வெ | பஞ்15-3 | திரு27-58 | சித்60 | |
| 18 | 3 | சனி | சஷ்9-33 | புன24-33 | சித்60 | |
| 19 | 4 | ஞா | சப்5-25 | பூசம்22-35 | சித்60 | |
| 20 | நவம்பர்மீ 5 | திங் | அஷ்2-48 | ஆயி22-8 | சித்22-8ம | |
| 21 | 6 | செ | நவ1-40 | மகம்23-3 | சித்60 | |
| 22 | 7 | புத | தச2-5 | பூரம்25-28 | அமி60 | |
| 23 | 8 | வியா | ஏகா3-58 | உத்29-13 | ம29-13சி | சர்வமத்வ ஏகாதசி |
| 24 | 9 | வெ | து6-55 | அஸ்34-8 | அ34-8சித் | சுபமுகூர்த்தம் செய்ய |
| 25 | 10 | சனி | திர11-15 | சித்40 | மர40-0அ | நரகசதுர்த்தி ஸ்நானம் |
| 26 | 11 | ஞா | ச●16-25 | சுவா46-48 | சி46-48ம | சர்வத்திர அமாவாசை, கேதார கௌரி விரதம், தீபாவளி பண்டிகை |
| 27 | 12 | திங் | அ22-18 | விசா54-5 | ம-54·5சி | சூரிய கிரஹணம் |
| 28 | 13 | செவ் | பிர28-45 | அனு60 | சித்60 | கார்த்திகசுத்தம்,பலிபூஜா |
| 29 | 14 | புத | துதி35-38 | அனு1-50 | சித்60 | இயமத்துதியா |
| 30 | 15 | வியா | திரி42-25 | கேட்9-50 | பி9-50சித் | விஷ்ணுபதி புண்யகாலம் கடைமுழுக்கு ஸ்நானம் |

| | | | |
|---|---|---|---|
| | குரு | ராகு | செ |
| | 1௳ விரு-சுக்<br>26,, தனு-சுக் | | |
| | சனி கேது | சூ-பு சுக் | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE " ANANDA BODHINI" POWER PRESS,
15, VENKATESA MAISTRY ST., MADRAS.